# குமரன்

## ஆரம் 17, முத்து 15

## *November 23, 1939*

Record no. 313

*Kumaraṉ*

*Āram 17, muttu 15*

*November 23, 1939*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள்.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன் தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது. — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 17. | காரைக்குடி, பிரமாதி-ஞு கார்த்திகை-மீ 8-உ (23—11—39) | முத்து 15.

# "உண்மை நிலையை உலகம் அறியட்டும்"

## "விஷயத்தைக் குழப்புவானேன்?"

'அநாவசியமான பீதி' என்று தலைப்பிட்டு மகாத்மா 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதியுள்ள வியாசத்தின் விவரமாவது:-

ஒரு சகா பின்வருமாறு எழுதுகிறார்:—

"பத்திரிகைகளில் தங்கள் அறிக்கையைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். எனக்கு வருத்தமும் ஏற்பட்டது. இராஜப் பிரதிநிதி மீண்டும் சமரஸத்துக்கு முயலப்போவதால், நாம் அவசரப்படக்கூடாதென்றும் முஸ்லிம் லீகுடன் ஒரு ஒப்பந்தம் ஏற்படும்வரை மேற்கொண்டு எதுவும் செய்யக்கூடாதென்றும் தாங்கள் சொல்லுகிறீர்கள். இதனால் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டுடனோ முஸ்லிம் லீகுடனோ சமரஸம் ஏற்படுவது கஷ்டம்தான் என நான் நினைக்கிறேன்."

இந்நண்பர் குறிப்பிட்ட இந்த அபிப்பிராயம் மற்றும் பல காங்கிரஸ்காரர்களுக்கிருப்பதாகத் தெரிகிறது. ஆகவே நான் அந்த அச்சத்தைப் போக்கவேண்டியது அவசியம். எப்படியும் இரு காரணங்களுக்காக நாம் சட்ட மறுப்பை நிறுத்தி வைக்கவேண்டியது இன்றியமையாததாகும். கட்சிகளுக்கிடையே சமரஸம் ஏற்படுத்த ராஜப்பிரதிநிதி முயற்சி செய்கையில், நாம் அவசரப்பட்டுச் சட்ட மறுப்பை ஆரம்பிக்கக்கூடாது. நாம் அதிக நாளைக்கு இவ்விதம் பொறுத்திருக்க வேண்டியதுமில்லை. இராஜப் பிரதிநிதிக்காகச் சட்ட மறுப்பை ஆரம்பிக்காமல், நிறுத்துவது ஒரு சமரஸம் ஏற்பட உதவுவதாகும். இதில் தவறு ஒன்றுமில்லை. முஸ்லிம் லீகுடன் நாம் போராடிக்கொண்டிருக்கிறோம். நமக்குள்ளேயே சச்சரவிட்டுக்கொண்டிருக்கையில் சட்ட மறுப்பை நாம் பெருவாரியாக ஆரம்பிக்க முடியாது. உண்மையை மறைத்தால் நாம் உண்மையான ஒப்பந்தம் ஏற்பட வழி தேட முடியாது. முஸ்லிம்களும் இந்நாட்டு அபிவிருத்தியை இவ்விதம் பல நாள் தடுத்து வைக்க முடியாது. இந்நாட்டு அபிவிருத்திக்கு நம்மைப்போல அவர்களும் உழைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

முஸ்லிம்களில் சிலர் சுதந்திரத்தை விரும்பாது போனால், அதற்காக மற்றவர்களும் சுதந்தரம் அடையாமலிருக்க அவர்கள் எப்போதும் வழி தேடக்கூடாது. முஸ்லிம் லீக் விஷயத்தில் காங்கிரஸ் நல்லெண்ணத்துடன் நடந்துகொள்ள விரும்புகிறதே யொழிய போரிட விரும்பவில்லை. உள்ளதை உள்ளபடிச் சொன்னால் ஒப்பந்தம் சீக்கிரம் ஏற்படக்கூடும். நான் சர்வ காரியங்களையும் இப்போது நிறுத்திவிடும்படிச் சொல்லவில்லை. சட்ட மறுப்பை மட்டுமே நிறுத்திவைக்கும்படிச் சொன்னேன்.

### அவசரம் வேண்டாம்

காங்கிரஸ் சலனமற்ற ஸ்தாபனமன்று. அது எப்போதும் சலித்துக்கொண்டிருக்கிறது. இனி நடக்கவிருப்பதை நான் இப்போது முன்னறிந்து சொல்லமுடியாது. இந்த நெருக்கடியைச் சமாளிக்க காங்கிரஸ் சட்டமறுப்பைத் தவிர வேறு வழியையும் நாடலாம். எதற்கும் நாம் அவசரப்படக் கூடாது. அவசரப்பட்டால் நமது லக்ஷியம் கெட்டுவிடும் என்பதை நான் திருப்பிச் சொல்லுகிறேன். நான் ஒரு வார்த்தை சொன்னால் போதுமென்றும் தக்கபடி நடந்துகொள்ள சித்தமாக விருப்பதாகவும் பிரதிதினமும் சகோதரர்களும் சகோதரிகளும் எனக்கு எழுதி வருகிறார்கள். பலாத்காரம் ஏற்பட்டு விடுமோவென்று நான் அஞ்சவேண்டியதில்லையென்றும் அவர்கள் ஆறுதல் கூறுகிறார்கள். அவர்கள் சொல்வது உண்மையானால் அவர்கள் தற்சமயம் பொறுமை காட்ட வேண்டும். அதனால் அவர்களுக்குப் பலம் அதிகரிக்கும். வெற்றியும் நிச்சயம்.

## காங்கிரஸ் ஹிந்து ஸ்தாபனமல்ல

### பொறுத்திருந்தால் வெற்றி நிச்சயம்

* * *

மகாத்மா காந்தி லண்டனில் வெளியாகும் 'நியூஸ் கிரானிகல்' பத்திரிகைக்கு அனுப்பியுள்ள செய்தியின் விவரமாவது:-

இந்தியாவைச் சுயேச்சை பெற்ற தனி நாடாகக் கருத பிரிட்டனுக்கு உத்தேசமுண்டா, அல்லது இந்தியா எப்போதும் பிரிட்டனுக்கு அடிமைப்பட்டிருக்க வேண்டுமா? பிரிட்டனை மீறிப்போய் ஒரு சவுகரியம் அடைவதற்காகக் காங்கிரஸ் இந்தப் பிரச்னையைக் கிளப்பவில்லை. உலக நெருக்கடியில் இந்திய மஹாஜனங்கள் தாங்கள் எவ்விதம் நடக்க வேண்டுமென்பதை நிர்ணயித்துக் கொள்ளவே காங்கிரஸ் இதைக் கிளப்பியிருக்கிறது. பிரிட்டன் ராணுவ விஷயத்திலும் மற்ற விஷயங்களிலும் இந்தியா மீது செலுத்தும் ஆதிக்கத்தின் பயனாக அது தனது இஷ்டப்படி இந்திய பிரிட்டிஷ் படைகளைத் திரட்டி இந்தியாவின் செல்வத்தைச் சுரண்டி வருகிறது.

இந்தியாவிலுள்ள 11 மாகாணங்களில் எட்டு மாகாணங்கள் திட்டமாக இந்த யுத்தத்தில் கலக்க முடியாதெனச் சொல்லிவிட்டன. இந்த யுத்தத்தின் பயனாக இந்தியாவுக்குப் பூரண சுயேச்சை கிடைக்கவில்லையானால் இதில் கலந்தென்ன பிரயோஜனம் என்று அவை ஸ்பஷ்டமாகக் கேட்டிருக்கின்றன.

### விஷயங்களைக் குழப்புவானேன்?

மற்ற விஷயங்கள் முக்கியமானவையல்ல, மைனாரிட்டிகள் விஷயம் குடும்ப விஷயம். மெஜாரிட்டி வகுப்பினரும் தங்களுக்குள் ஒரு முடிவு செய்து கொள்ள வேண்டும். பிரஸ்தாப அரசியல் நிர்ணய சபைதான் சரியான, நிலையான பரிகாரம் தேட முடியும். மற்றவர்கள் செய்யும் ஏற்பாடுகள் அரைகுறையானவைதான். அவற்றிற்குப் பொதுஜன அங்கீகாரமுமிருக்காது. மைனாரிட்டி பிரச்னையை இப்போது பிரஸ்தாபிப்பது வீணாக விஷயங்களைக் குழப்புவதற்கேயாகும்.

அதோடு சமஸ்தானாதிபதிகள் காரியத்தைப் பிரஸ்தாபிப்பது இன்னும் பொருத்தமற்ற காரியமாகும்.

### ஹிட்லர் கேட்டது பொருத்தமே

இந்தியாவைச் சுயேச்சை பெற்ற நாடாக மதித்துப் பிரிட்டன் தனது உண்மைத் தன்மையை வெளிப்படுத்தட்டும் என ஹிட்லர் அறைகூவி அழைத்திருப்பதில் ஆச்சரியமில்லை. அவ்விதம் அவர் கேட்டதன் நோக்கம் என்னவோ தெரியாது. ஆனால் அவர் கேட்டது மட்டும் பொருத்தமே.

எப்படியிருந்தாலும் காங்கிரஸ் கோரிக்கைகள் சந்தேகத்திற்கிடமற்றதென்பதைப் பிரிட்டிஷ் பொதுஜனங்கள் உணர வேண்டும். ஏகாதிபத்யக் கொள்கையை விட்டொழிக்க பிரிட்டன் மனம் கொண்டால் இந்தியா திருப்தியடைந்து விடும்.



## ஹிட்லர் கேள்விபற்றி மகாத்மா பிரஸ்தாபம்

பிரிட்டனுக்கும் காங்கிரஸுக்கும் போராட்டம் ஏற்படுமானால், எதற்காக அந்த போராட்டம் ஏற்பட்டதென்பதை உலகம் அறியவேண்டும்.

* * *

'காங்கிரஸ் ஹிந்துக்களின் ஸ்தாபனம்' என்று இந்திய மந்திரி ஜெட்லண்ட் பிரபு சமீபத்தில் கூறினாரல்லவா? அந்த வீண்பழிக்குக் காந்திஜி 'ஹரிஜன்' பத்திரிகையில் பதிலளித்திருக்கிறார். காங்கிரஸ் ஹிந்து ஸ்தாபனமல்லவென்பதை மகாத்மா பல ஆதாரங்களுடன் விளக்கியுள்ளார். காங்கிரஸை ஹிந்து ஸ்தாபனமென அழைப்பதை விடப் பெருத்த பழி வேறொன்றில்லையென அவர் உரைத்திருக்கிறார். எத்தனையோ ஆங்கிலேயர்களும் முகம்மதியர்களும் காங்கிரஸில் அங்கம் வகித்தும் ஒத்துழைத்துமிருக்கின்றனர் என்பதை எடுத்துக்காட்டுகிறார். முடிவாகப் பின்வருமாறு கூறுகிறார்:

நாட்டின் அரசியல் முன்னேற்றத்துக்கு வகுப்பு ஒற்றுமை அவசியமென்பதைக் காங்கிரஸ் உணர்ந்தது. வகுப்புப் பிரச்னைகளில் சுத்த தேசிய மனோபாவமும், பாரபட்சமற்ற தன்மையையும் கொண்டாட வேண்டியது தான் காங்கிரஸின் கடமை.

### கஷ்டமான காரியம்

மற்றவர்கள் வேறு என்ன சொன்னாலும் சரி, இந்திய மகாஜனங்களின் நம்பிக்கையையும், அபிலாஷைகளையும் பிரதிபலிக்கும் ஸ்தாபனம் காங்கிரஸ்தான் என்று நான் கண்டிப்பாகச் சொல்லுகிறேன். அரசியல் அபிலாஷைகள் சம்பந்தப்பட்டமட்டில் இந்தியா பூராவுக்கும் பிரதிநிதியாக விராத யாருடனும் அது எத்தகைய ஒப்பந்தமும் செய்துகொள்ள முடியாது. முஸ்லிம்களுக்கு விரோதமாக ஹிந்துக்களுக்கும், ஹிந்துக்களுக்கு விரோதமாக முஸ்லிம்களுக்கும் பிரதிநிதியாகவிருக்க அதன் பாரம்பரைப் பெருமை அதற்கு இடம் கொடுக்கமுடியாது. ஹிந்துஸ்தானத்தில் வசிக்கும் ஜனங்கள் அனைவரின் பொது நன்மைக்காக உழைக்க அது தகுதிபெற்றதாகும். பொது நன்மையை வளர்ப்பதற்காகத் தனி மனிதர்களுடனோ அல்லது ஸ்தாபனங்களுடனோ ஒப்பந்தங்கள் செய்துகொள்ள காங்கிரஸ் முயல்வதில் எத்தகைய தவறுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஜனங்களனைவரும் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் உதவியாகவிருக்கவேண்டுமே யொழிய முரணாகவிருக்கக்கூடாதென்று சொல்லத் தேவையில்லை. இது கஷ்டமான காரியமே. ஆனால் ஜனங்களும் ஸ்தாபனங்களும் காங்கிரஸினிடம் நல்லெண்ணம் காட்டினால் இதைச் சுலபமாகச் சாதிக்கமுடியும். அத்தகைய நல்லுணர்ச்சியை இதுவரை காங்கிரஸ் பெற்றிருக்கவில்லை. அதைப் பெறும் வரைக்கும் அது காத்திருக்கவேண்டியிருக்கலாம். ஆனால் வேறு எந்த ஸ்தாபனமாவது அதைச் சாதித்துக்கொடுத்தால் காங்கிரஸ்காரர்கள் அதை வரவேற்பர்.

## சென்னை ரேடியோ

### நவம்பர் 23உ வியாழன்

ம. நி.
1·00 ஸ்ரீ பலராமன் கிளாரியனெட்
5·20—6·00 } 6·20—6·45 } ஸ்ரீ வி. வி. சடகோபன் வாய்ப்பாட்டு
6·45—7·00 } 7·50—8·15 } ஸ்ரீமதி வி. கிருஷ்ண வேணி வாய்ப்பாட்டு
8·15 ஒளவையின் சரிதம் நாடகம்
8·35 ஸ்ரீமதி பி. வி. பார்வதி வார்வியார் வாய்ப்பாட்டு

★

### 24உ வெள்ளி

5·20 ஸ்ரீ ஒய். என். ஸ்ரீனிவாச மூர்த்தி வாய்ப்பாட்டு
6·05—6·45 } 7·50—8·00 } ஸ்ரீ வி. பார்த்தசாரதி நாகசுரம்
7·00 பத்திரிகா லோகம்: "சக்தியும் செல்வாக்கும்" ஸ்ரீ-டி. சுந்தரவரதன் தமிழ்ப் பேச்சு
8·00—9·00 } 9·45–10·30 } திருப்பத்தூர் ஸ்ரீமதி செல்லம்மாள் வாய்ப்பாட்டு

★

### 25உ சனி

1·00—1·30 } 1·35—1·50 } ஸ்ரீ கே. நரசிம்மாச்சாரியார் வாய்ப்பாட்டு
5·20—6·00 } 6 05—6·45 } ஸ்ரீ பெஹதா ராஜராவ் வீணை
6·45 பாலூர் ஸ்ரீ கே. வெங்கட்டராமய்யர் வாய்ப்பாட்டு
7·50 வேதாள உலகம்—தமிழ் நாடகம்

★

### 26உ ஞாயிறு

1·00—1·30 } 2·00—2·30 } ஸ்ரீமதி அபயாம்பாள் வாய்ப்பாட்டு
1·35 ஸ்ரீ ஷாந்தி வர்த்தனு வீணை
4·00 ஸ்ரீ எஸ். எம். ஹுசேன் வாய்ப்பாட்டு (ஹிந்துஸ்தானி சங்கீதம்)
5·20 பாலூர் ஸ்ரீ கே. வெங்கட்டராமய்யர் வாய்ப்பாட்டு
6·05—6·27 } 6·37—7·20 } ஸ்ரீமதி குமாரி சூடாமணி வாய்ப்பாட்டு (ஸ்ரீ சர்மா சகோதரர்கள் வாத்யக் கோஷ்டியுடன்)
9·45 திருவாலங்காடு ஸ்ரீ சுந்தரேசய்யர் பிடில்

★

### 27உ திங்கள்

1 00—1·30 } 1·35—2·00 } ஸ்ரீமதி பத்மாக்ஷி வாய்ப்பாட்டு
4·20 சிறு குழந்தைகளின் தமிழ் பாடல்கள்: ஸ்ரீ தஞ்ஜை மூர்த்தி ஓதுவார் ஏற்பாடு
5·20—6·00 } 6·05—6·45 } ஸ்ரீ டி. எஸ். வெங்கட்டராம சாஸ்திரி வாய்ப்பாட்டு
6 45 பாம்பாட்டி—தமிழில் விசேஷ நிகழ்ச்சி
7·00 விஞ்ஞானி-ஸ்ரீ. பி. என் அப்புசாமி ஐயர் பேச்சு
9·45 ஸ்ரீ வி. ராமசாமி ஐயர் வாய்ப்பாட்டு

★

### 28உ செவ்வாய்

1 00 ஸ்ரீ எம். வெங்கடசாமி ராஜு கோட்டு வாத்தியம்
5·20—6·00 } 6·05—6·45 } ஸ்ரீ வி. ராமமூர்த்தி ஐயர் வாய்ப்பாட்டு
6·45 'யார் குற்றம்?' தமிழ் நாடகம்
8·10 ஸ்ரீமதி எம். லோகாம்பாள் வாய்ப்பாட்டு

★

### 29உ புதன்

1·00 ஸ்ரீ கே. பி. சுப்ரமண்ய ஐயர் வாய்ப்பாட்டு
5·20—6 00 } 6·05—6·45 } திருவீழிமழலை சகோதரர்கள் நாகசுரம்
7·00 "பல்லவர்கள்" தமிழ்ப் பேச்சு ஸ்ரீ வி. ஆர். எல். தீட்சதர்
8·10 ஸ்ரீமதி எம். எஸ். சௌந்தரம் வாய்ப்பாட்டு

★

### 30உ வியாழன்

1 00 அ. இ. ரே வித்வான் ஜலதரங்கம்
1·35 பெண்கள் உலகம்—சங்கீதம்
1·40 பெண்களுக்குரிய தொழில்கள்: 'நடிப்பு' ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி தமிழில் பேசுவார்.
5·20—6·00 } 6·05—6·45 } விஞ்சமூரி ஸ்ரீ வரதராஜ ஐயங்கார் வாய்ப்பாட்டு
8·35 ஈரோடு ஸ்ரீ விஸ்வநாதய்யர் பிடில்

## மலேயா நாட்டில் இந்தியர்

### ரப்பர் உற்பத்தி விவரம்

மலேயாவில் உள்ள தொழில்களில், முக்கியமானவை இரண்டு. ஒன்று தகரம், இரண்டாவது ரப்பர்.

சுரங்க வேலையிலும், தொழிற்சாலையிலும், பெரிதும் சைனாக்காரரும், ரப்பர் தோட்டம், சர்க்கார் நிலையம், தனிப்பட்டவர்கள் ஆபீசுகள் ஆகியவைகளில் பெருவாரியாக இந்தியர்களும் உள்ளனர். மலேயாவிலுள்ள, தொழிலாளர்கள், மிகக் குறைந்த அளவினர். நல்ல திறத்துடனுள்ள இந்தியத் தொழிலாளரின் உதவியின்றி, மலேயாவின் தொழில்கள் நடக்குமென எண்ணுவதற்கில்லை.

இதனை, 1938-ம் ஆண்டு அறிக்கையில், மலேயாவிலுள்ள இந்தியா ஏஜண்ட் கூறுகிறார்.

மலேயாவில், தற்சமயம் 7,44,000 இந்தியர்கள் உள்ளனர். மொத்த ஜனத்தொகையில் 141% இந்தியர்கள். நன்கு அமைக்கப் பட்டுள்ள நாலுவகைத் தொழில்களில், அதாவது சுரங்கம், தொழிற்சாலை, சர்க்கார் நிலையம், தனிப்பட்ட ஆபீசுகள் ஆக இந்த நான்கில், 278,000 இந்தியரும் 144,000 சைனாக்காரரும் மலாய், ஜாவா முதலிய மற்ற நாட்டினரும் வகுப்பினருமாக 49,000 பேரும் இருக்கின்றனர்.

சுரங்கத் தொழிலில் 7000 இந்தியரும் தொழிற்சாலைகளில் 8000 பேரும், சர்க்கார் இலாக்காக்கள், பொது ஆபீசுகள் ஆகியவற்றில் 48,000 பேரும் உள்ளனர். நகரங்களிலே உள்ள தொழிலாளர்கள் நன்றாக, கட்டுப்படுத்தப்படாததாலும், வெளிநாட்டுத் தொழிலாளர்கள் குவிந்து போட்டி இடுவதாலும் தொழிலாளர்கள் கூலி கேட்கும் திறத்திலே சற்று மட்டாகவே இருக்கவேண்டி நேரிடுகிறது.

தோட்டங்களில் 215,000 பேர் வேலை பார்க்கின்றனர்.

வியாபார மந்தத்தினால், ரப்பர் உற்பத்தியின் அளவு 55%தான் இப்போது அனுமதிக்கப்பட்டிருக்கிறது. அதனால் தோட்டங்களில் தொழிலாளர்கள் தேவை குறைந்துவிட்டது. தொழிலாளர்களை திருப்பி அனுப்பிவிடுவது பொருளாதாரத் துறையில் நல்லசல்ல என்று கருதி, வேலை நேரத்தைக் குறைத்தும் கூலியைக் குறைத்தும், பலவிதமாக முயன்று தொழிலாளர்களை வீட்டுக்கு அனுப்பாது வைத்துக்கொள்ளும் ஏற்பாடு நடந்தது.

50 செண்ட் ஆணுக்கும், 40 செண்ட் பெண்ணுக்கும், கூலி தரப்பட்டு வந்தது. தற்சமயம் இது குறைக்கப்பட்டு, ஆணுக்கு 45 செண்ட்டும், பெண்ணுக்கு 35 செண்ட்டுமாகத் தரப்படுகிறது. இந்த விகிதம், 1938-ம் ஆண்டு மே முதல் தேதி முதல் அமுலுக்கு வந்தது. இப்போது இது 40 செண்டாகவும் 32 செண்ட்டாகவும் குறைக்கப்பட்டிருக்கிறது.

இந்த சமயத்தில், இந்தியாவிலிருந்து தொழிலாளர்கள் மலேயா செல்வதை இந்திய சர்க்கார் தடுத்துவிட்டனர்.

கூலி குறைக்கப்பட்டதால் தொழிலாளர்கள் தாம், கூட்டுறவு பாங்கிகளில் சேர்த்து வைத்திருந்த பணத்தைத் திரும்பப்பெற்று அதைச் செலவிட நேரிட்டது. இவர்கள் கூட்டுறவு பாங்கியில் 10,00,000 ரூபாய் வரைசேர்த்து வைத்திருந்தனர்.

1937ம் ஆண்டில் 313 கூட்டுறவு பாங்கிகள் இருந்தன. 1938ல் 338 பாங்கிகள் ஏற்பட்டன. ஆனால், கூட்டுறவு பாங்கியின் மெம்பர் தொகை மட்டும், 3000க்குக் குறைந்து விட்டது. இந்தியாவிலுள்ள தமது குடும்பத்தினருக்கு அனுப்பும் தொகையும், தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்கியில் சேர்த்துவைக்கும் தொகையும் குறைந்து விட்டது.

மலேயாவில் முன்பு, 622, தமிழ்ப் பள்ளிகள் இருந்தன. இப்போது 714 தமிழ்ப் பள்ளிகள் உள்ளன. இவைகளில் 567 பள்ளிக்கூடங்களுக்கு, சர்க்கார் கிராண்ட் கிடைக்கிறது. ஆனால், பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் அதிகமாக இல்லை. இவைகளையன்றி, 14 சர்க்கார் பள்ளிக்கூடங்களும், 23 மிஷனரி பள்ளிகளும், 69 தனிப்பட்டவர் நடத்தும் பள்ளிக்கூடங்களும் உள்ளன.

சர்க்கார் செலவிலே நடந்து வந்த வைத்தியசாலைகளின் தொகை 232லிருந்து 211 ஆகக்குறைந்து விட்டது. வைத்தியர்கள் தொகை 35 லிருந்து 27 ஆகக் குறைந்து தற்சமயம் 22 பேர்தான் உள்ளனர். சிறிய தோட்டங்களில் வைத்திய வசதி ஏற்படுத்த வேண்டிய பிரச்சினை இன்னும் தீர்க்கப்படாமலே யிருக்கிறது.

1936ம் ஆண்டிலிருந்ததை விட 1937ல் இந்தியாவுக்கும், மலேயாவுக்கும் நடக்கும் வியாபாரத்தில் விருத்தி ஏற்பட்டது. ஆனால் 1938ல் வியாபாரத்தில் சற்று தளர்ச்சி ஏற்பட்டது.

மலேயாவுடன் உலக நாடுகள் நடத்தும் வியாபாரத்தில் 100க்கு 97 பாகம் இந்தியாவில் நடத்தப்படுகிறது. மலேயாவில் வியாபாரம் இந்தியர் கையிலேயே இருக்கிறது.

டீ,புகையிலை,சினிமாப் படங்கள், சணல் ஆடைகள், சலவையாகாத பருத்தித் துணி முதலியன மலேயாவுக்கு வருகின்றன. கடந்த பத்தாண்டுகளாக வந்த அளவைவிட அதிகமான அளவு துணி தற்சமயம் மலேயாவுக்கு வருகிறது.

பாக்கு, மிளகு, தேங்காய், பனை, எண்ணெய் முதலிய பண்டங்கள், மலேயாவிலிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன. இந்த வியாபாரமும் இந்தியரிடமே இருக்கிறது.

ஆசியக்காரரை சர்க்கார் இலாகாவில் உயர்தர அதிகாரத்தில் நியமிப்பதைப்பற்றி யோசிக்கப்பட்டு வருகிறது. இதற்காக ஒரு கமிட்டி நிறுவப்பட்டிருக்கிறது. மலாய் நாட்டு பாதுகாப்பு விஷயமாகத் தாமும் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் இந்தியர்களுக்கு விசேஷமாக இருக்கிறது. இந்த உணர்ச்சியை மலாய் சட்டசபையில் இந்தியப் பிரதிநிதிகள் எடுத்துரைத்துள்ளனர்.

## காரைக்குடி பஞ்சாயத்துக்கோர்ட்டு

### 1939-௵ சூட் நிர் 62.

புது.அ.வீர.வீரய்யா செட்டியார்-வாதி

ஆ. பொன்னுச்சாமி செட்டியார் 1, ந.சு. பழனியாண்டி செட்டியார் 2 } பிரதிவாதிகள்.

2ம் பிரதிவாதிக்கு அறிவிப்பதாவது:-

வாதி—உங்கள் வகையறு பேரில் ரூ 50-க்கு தாவா செய்திருப்பதில் உமக்கு சமன்கள் பல முறை அனுப்பியும் சார்வாகாததினால் ஷை பிருதை முடிவு செய்ய 23—11—39உக்கு வாயிதா போட்டிருக்கிறது. அன்று பகல் 2-மணிக்கு நம் முன்பாக நீங்கள் ஆஜராக வேண்டியது.தவறினால் எக்ஸ்பார்டியாக முடிவு செய்யப்படும்.

பனை. மே. மே. பழ.
வெங்கிடாசலம் செட்டியார்,
18-11-39. பிரஸிடெண்டு.



## திருச்சி ரேடியோ

### நவம்பர் 23உ வியாழன்

1·39 ஸ்ரீ நடராஜ பிள்ளை புல்லாங்குழல்
5·20 ஸ்ரீமதி எஸ் ஜயலக்ஷிமி வாய்ப்பாட்டு.
6·45—7·15 } 8·45—9·20 } ஸ்ரீ என். ஆறுமுகம்பிள்ளை வாய்ப்பாட்டு.
7·50 ஸ்ரீ என். கிருஷ்ணன் பிடில்.
9·45 ஸ்ரீமதி டி. ஆர். பிச்சை அம்மாள் வாய்ப்பாட்டு.

★

### 24உ வெள்ளி

1·35 ஸ்ரீ டி. பி. ராமகிருஷ்ணன் வாய்ப்பாட்டு.
5·20 உப்பிலியப்பன் கோவில் ஸ்ரீ சின்னத்தம்பி சகோதரர்கள் நாகசுரம்
6·45—7·15 } 8·45—9·20 } ஸ்ரீமதி லக்ஷிமி ராஜாங்கம் வாய்ப்பாட்டு.
7·15 ஜாக்கிரதை: "பேர் பெற்ற பிச்சைக்காரன்" ஸ்ரீ. டி. எம். நாராயண ஸ்வாமி பிள்ளை
7·50—8·45 } 9·45-10·30 } ஸ்ரீ எல். ராஜா ராவ் வீணை

★

### 25உ சனி

1·35 காஞ்சீவரம் ஸ்ரீமதி டி. ராமதிலகம் வாய்ப்பாட்டு.
5·20 திருப்பாற்கடல் ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யங்கார் பிடில்.
6·45—7·15 } 8·30—9·20 } காஞ்சீவரம் ஸ்ரீ வி. எஸ். ரத்னஸ்வாமி பிள்ளை வாய்ப்பாட்டு,
7·15 "கல்வி: தொழில் பள்ளிக்கூடங்கள்" ஸ்ரீ ஜி. செல்வபதி செட்டியார் பேசுவார்.
7·50 கதம்பம்—ஒரு ரேடியோ விமர்சனை

★

### 26உ ஞாயிறு

1·35 ஸ்ரீ டி. ஆர். நாராயண ஸ்வாமி வாய்ப்பாட்டு.
2·47 ஸ்ரீ ஞானசேகரன், ஆர். ஜோசப் வாய்ப்பாட்டு
5·20—6·00 } 7·50—8·30 } ஸ்ரீமதிகள் ஆர். கல்பகமும் ஜி. விசாலாட்சியும் வாய்ப்பாட்டு.
6·45—7·15 } 8·45—9·20 } ஸ்ரீமதி எஸ் வித்யா வீணை
7·15 நாணய சாஸ்திரம்–பேச்சு
8·30 'கார்த்திகை' ஒரு அஜாந்தா நிகழ்ச்சி

★

### 27உ திங்கள்

5·20—6·00 } 7·50—8·45 } ஸ்ரீ வி. வி. வைத்தியநாதய்யர் வாய்ப்பாட்டு.
8·45 ஸ்ரீமதி சரஸ்வதி வாய்ப்பாட்டு
6·45—7·20 } 9·45-10·30 } ஸ்ரீ எம். பாலகிருஷ்ணய்யர் பிடில்.

★

### 28உ செவ்வாய்

1·35 பாலக்காடு ஸ்ரீ என். ஆர். கிருஷ்ணய்யர் புல்லாங்குழல்.
5·20—6·00 } 7·50—8 30 } ஸ்ரீ கே. எம். ராமஸ்வாமி பிள்ளை வாய்ப்பாட்டு.
6·45—7·15 } 8·30—9·20 } ஸ்ரீ எல். கோபால் ராவ் வீணை.
7·15 சிலப்பதிகாரத்திலிருந்து "கானல் வரிப்பாட்டு."

★

### 29உ புதன்

5 20 இலுப்பூர் ஸ்ரீ நடேச பிள்ளை நாகசுரம்
6·45—7·15 } 8·45—9·20 } ஸ்ரீமதி கே. சாவித்ரி அம்மாள் கோட்டு வாத்தியம்
7·15 புஸ்தக விமர்சனம்-ஸ்ரீ எஸ்.சேஷாத்திரி ஐயங்கார்.
7·50—8·30 } 9·45-10·30 } ஸ்ரீமதி டி. ராமதிலகம் வாய்ப்பாட்டு

★

### 30உ வியாழன்

1·35—2·00 } 2·30—3·00 } ஸ்ரீ பி. எஸ். நடராஜன் வாய்ப்பாட்டு.
2·00 செம்மங்குடி ஸ்ரீ நாராயணஸ்வாமி ஐயர் பிடில்.
5·20—6·00 } 6·45—7·15 } ஸ்ரீமதி கௌரி ராமுண்ணி மேனன் வீணை.
7·50—8·30 } 8·45—9·20 } ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் வாய்ப்பாட்டு.



## பின்லந்து சுதந்திரம் பறிக்கப்படுமா?

### சோவியத்—பின்லந்து தகராறுக்குக் காரணமென்ன?

### இயற்கை வளம் நிரம்பிய பின்லந்தின் சரித்திரம்

பின்லந்து: இந்த தேசத்துக்கு இப்போது கொஞ்சம் பிரதானம் ஏற்பட்டிருக்கிறது. இதுவரை இதைப்பற்றி உலகத்தினர் கவலைப்பட வில்லை. இப்போது உலகத்தினர் திடீரென இதன்மீது கவனம் செலுத்தி வருகிறார்கள். காரண மென்ன? இதற்கும் ரஷ்யாவிற்கும் ஏற்பட்டுள்ள தகராறுதான் அந்தப் புதிய காரணமாகும்.

ஜெர்மனி போலந்தில் இறங்கியதும், ரஷ்யா போலந்தில் பாதியை கபளீகரம் செய்து விட்டது. பால்டிக் கடற்கரைப் பகுதியில் ரஷ்யாவிற்கு நீண்ட நாட்களாக ஆசை உண்டு. தனது கடற்படையை விஸ்தரிக்க பால்டிக் கடலில் சில துறைமுகங்கள் அத்தியாவசியமென ரஷ்யா நினைத்தது. லட்வியா, லித்துவேனியா, எஸ்தோனியா, பின்லந்து என்ற இந்த நாடுகள் பால்டிக் கடற்கரையில் வரிசையாக இருக்கின்றன. இவைகளின் பூபாக எல்லையில் ரஷ்யா இருக்கிறது. எனவே ரஷ்யா இந்த நாடுகளுடன் சிற்சில துறைமுகங்களைத் தன்வசம் விட்டுவிட ஒப்பந்தம் செய்ய முனைந்தது. பின்லந்தைத் தவிர மேற்கூறியவைகளில் மற்ற நாடுகள் சோவியத் உடன்படிக்கைக்கு ஒப்புக்கொண்டு விட்டன. ஆனால் பின்லந்து மாத்திரம் சோவியத் கோரிக்கையை ஏற்க மறுத்துவருகிறது. இதனால் என்ன நேருமோ என்ற கவலை இப்போது ஏற்பட்டிருக்கிறது. பின்லந்திற்கு அருகே சோவியத் 80 ஆயிரம் துருப்புகளைக் கொண்டுவந்து குவித்திருக்கிறது. சண்டையா? சமாதானமா? என்றகேள்வி இப்போது எழுந்திருக்கிறது.

பலம்பொருந்தியசோவியத்தைஎதிர்த்து நிற்கும் பின்லந்தின் சரித்திரம் விசித்திரமானது. அதன் சாரத்தைக் கீழே காண்க:

பின்லந்தின் விஸ்தீரணம் 144,253 சதுர மைல்களாகும். இதன் தலைநகரம் ஹெல்ஸிங் போர்ஸ் என்பது. இந்த நாட்டுக்கு பால்டிக் கடலில் 1000 மைல் நீளமுள்ள கடற்கரைப் பிரதேசமிருக்கிறது. இக்கடற்கரைப் பிரதேசத்தில் ஏராளமான தீவுகளும் உண்டு, அவைகளில் ஆலந்துத் தீவுகள் பிரதானமானவை. இந்நாட்டில் பீடபூமிப் பிரதேசம் அதிகம். ஏராளமான சிறு ஏரிகள் வாய்க்கால்களால் இணைக்கப்பட்டு விவசாயத்திற்கு உபயோக முள்ளவைகளாக ஆக்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த பிரதேசங்கள் பின்லந்தில் இருந்தாலும் குறிப்பிடத்தகுந்த மலைப்பிரதேசங்கள் கிடையாது. இந்நாட்டின் வடபகுதியானது லாப்லந்து என்று அழைக்கப்படுகிறது. இங்கே லாப் ஜாதி மக்கள் வசிக்கிறார்கள். இவர்கள் ஒரிடத்தில் நிலைத்திருக்க மாட்டார்கள். ஊர் சுற்றிக் கொண்டே இருப்பார்கள்.

பின்லந்திலிருக்கும் ஏராளமான ஏரிகளில் செய்மா என்னும் ஏரி பெரியது. அதன் விஸ்தீரணம் 502 சதுர மைல்களாகும். இன்னரி ஏரியின் விஸ்தீரணம் 534 சதுர மைல்கள், பாஜியான் ஏரியின் பரப்பளவு 429 சதுரமைல்கள், உலாட்ராஸ்க் ஏரி 387 சதுர மைல் பரப்பளவு கொண்டது. 7000 சதுரமைல்களைக் கொண்ட லாடோஜா என்னும் ஏரியில் பாதி பின்லந்துக்குச் சொந்தமானது; மற்றப்பாதி ரஷ்யாவுக்குச் சொந்தமானது. சிறு சிறு ஆறுகள் ஏராளமாக பின்லந்திலிருக்கின்றன, வருடா வருடம் டிசம்பர் மாதத்திலிருந்து மே மாதம் வரை இந்த நாட்டு ஆறுகளும் ஏரிகளும் பனியாய் உறைந்துவிடும். மற்ற ஆறு மாதங்களில் உருகி ஜலமாக இருக்கும்.

பின்லந்தின் ஜனத்தொகை 3,329,461, பின்லந்தின் தெற்கு, மேற்குப் பகுதி கடற்கரைகளில்தான் அதன் ஜனங்கள் மிகுதியும் வசிக்கிறார்கள். பின்லந்து, ரஷ்யாவின் ஆட்சியின் கீழ் இருந்தகாலத்தில் ஏராளமான பின்லந்து வாசிகள் அமெரிக்காவுக்குக் குடியேற்றப்பட்டார்கள். பின்லந்துக்காரர்களின் பாஷைக்குப் பெயர் பின்னிஷ் என்பது. ஆனால் பின்லந்து நகரங்களில் எல்லாம் ஸ்வீடிஷ் பாஷையை ஜனங்கள் புரிந்துகொள்ளுவார்கள். ஆலந்துத் தீவுகளில் ஸ்வீடிஷ் பாஷைதான் நாட்டு பாஷையாக இருக்கிறது.

1835ம் வருடம் தான் பின்னிஷ் இலக்கியம் ஆரம்பிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஏழாவது எட்டாவது நூற்றாண்டுகளில் ஆசியப் பகுதிகளிலிருந்து ரஷ்யா வழியாகப் பின்லந்தில் இப்போது வசிப்பவர்களின் மூதாதைகள் பின்லந்து வந்து குடியேறினார்கள். 12வது நூற்றாண்டில் பின்லந்தின் ஆட்சி ஸ்வீடனிடம் இருந்தது. அப்போது தான் பின்லந்தில் கிறிஸ்தவ மதம் புகுத்தப்பட்டது. 16வது நூற்றாண்டில் பின்லந்துக்கு அரைகுறையான சுயவாட்சி வழங்கப்பட்டது. 18வது நூற்றாண்டில் ரஷ்யா பின்லந்து மீது கவனம் செலுத்தியது. 1721ல் நடந்த நிஸ்டட் ஒப்பந்தப்படி விபோர்க் என்ற மகாணத்தை ரஷ்யா கைப்பற்றியது. 1741ல் இழந்த அந்த பின்லந்து மாகாணத்தை ஈட்ட ஸ்வீடன் முயன்றும் பலிக்கவில்லை. ரஷ்யாவின் ஆதிக்கம் கொஞ்சம் கொஞ்சமாக விரிவடைந்தது.

பல வருடங்களாகத் தொடர்ந்து சமர் செய்த பின் 1809ல் ஸ்வீடன், பின்லந்திலிருந்து தனது ஆதிக்கத்தை வாபஸ் பெற்றுக் கொண்டது. பின் ரஷ்ய ஜார் ஆட்சிக்கு பின்லந்து மாறிற்று. அதிலிருந்து பல வருடங்கள் வரை இரு தேசத்திற்கும் நேசப் பான்மை பரவியது. பின்லந்தும் ரஷ்யாவின்நேசத்தோடு முன்னேறிக்கொண்டே வந்தது. ஒன்றாவது அலக்ஸாந்தர் எனும் ஜார் மன்னனின் ஆட்சியின் கீழ் ஏற்பட்ட பின்லந்து அரசியல் சட்டத்தை பின்லந்து ஜார் மன்னர்களும் மதித்து வந்தார்கள், தன் உள்நாட்டு விவகாரத்தைத் தானே தீர்த்துக்கொள்ளும் உரிமை அந்த அரசியல் திட்டத்தில் அடங்கியிருந்த போதிலும், நாட்டு மக்களுக்கு ரஷ்ய மேற்பார்வை பிடிக்கவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக பின்லந்தில் தேசியக் கட்சி எழுந்தது, பின்லந்தில் பின்னிஷ் பாஷையை சர்க்கார் பாஷையாக்க வேண்டுமென்பது தான் அவர்களின் முதல் கோரிக்கை. 1863ல் இந்த அவர்கள் நோக்கம் பூர்த்தியாயிற்று. ஆனால் பின்லந்தில் தேசிய இயக்கம் பரவுவதை ரஷ்யா விரும்பவில்லை. எனவே அடுத்த 50 வருடகாலம் ரஷ்யாவின் அடக்குமுறை பின்லந்தில் அதிகமாக இருந்தது. 1899ம் வருடம் பெப்ரவரி பிரகடனப்படி ஜார் அரசர் பின்லந்து விவகாரத்தில் தலையிட்டு ரஷ்ய ராணுவத்துடன் பின்னிஷ் ராணுவத்தை இணைத்தார். பின்னிஷ் காரர் எதிர்த்தும் வெற்றிபெற வில்லை. 1904-ம் வருடம் பின்லந்திலுள்ள ரஷ்ய கவர்னர் கொல்லப்பட்டார். பின்லந்தில் பொது வேலை நிறுத்தம் நடந்தது. இவைகளின் விளைவாக ஜார் அரசர் மீண்டும் பழைய சுயவாட்சி அரசியல் திட்டத்தை பின்லந்தில் நிறுவினர். 1908ம் வருடத்திலிருந்து மீண்டும் பின்லந்தின் உரிமைகள் பிடுங்கப்படும் படலம் ஆரம்பமாயிற்று. இப்போது ஜார் அரசர் சுயேச்சையாக முன்போல் ஆதிக்கம் செலுத்தவில்லை. ரஷ்ய டூமா சபையே பின்லந்து உரிமையைக் குறைக்க வேலை செய்து வந்தது.

கடந்த மகாயுத்தம் ஆரம்பமான போது பின்லந்துக்கு நல்ல காலம் பிறந்தது. 1917ல் ரஷ்யாவிலேயே புரட்சி ஆரம்பமாயிற்று. அந்தப் புரட்சியின் விளைவாக பின்லந்து பூரண சுதந்தரம் பெற்றது. ஆனால் உடனே நாட்டில் உள்நாட்டுக் குழப்பம் ஏற்பட்டது. பின்லந்திலுள்ள வெள்ளைக் கக்ஷியினருக்கு பிரிட்டனிடமிருந்தும் ஸ்வீடனிடமிருந்தும் உதவி கிடைக்காததால் அக்கக்ஷியினர் ஜெர்மனியின் உதவியை நாடினர். ஜெர்மன் படை உடனே பின்லந்துக்கு வந்து ரஷ்ய புரட்சித் துருப்புகளை துரத்திற்று. எனவே ஜெர்மனி பின்லந்துடன் ஒரு உடன்படிக்கை செய்து பின்லந்தில் ஜெர்மன் இளவரசர் ஒருவரை அரசராக நியமிப்பதென திட்டமிட்டது. ஆனால் 1918ம் வருடத்தில் ஜெர்மனியே தோற்றுவிட்டபடியால் அத்திட்டமும் மாண்டுபோயிற்று, 1920ம் வருடம் அக்டோபரில் பின்லந்துக்கும் சோவியத் ரஷ்யாவுக்கும் யுத்த நிலை ஏற்பட்டது. பின்னால் பின்லந்து பூரண சுயேச்சை நாடாக எல்லா வல்லரசுகளாலும் அங்கீகரிக்கப்பட்டது. பின்லந்தில் டயட் என்றும், செனட் என்றும் இரண்டு சட்டசபைகள் உண்டு. டயட் மெம்பர்கள், பின்லந்திலுள்ள 24 வயதுக்கு மேற்பட்ட எல்லா ஆண்களாலும் பெண்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவர். பின்லந்தில் இராணுவம் அதிகமில்லை. கடற்படையே பின்லந்துக்கு இல்லை, பின்லந்தின் உட்பகுதியில் ஜனங்கள் பிரிந்து வசிப்பதால் குழந்தைகள் படிப்புக்குப் போதிய வசதியில்லை. எனவே ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கு பேருக்கு எழுதப்படிக்கத் தெரியாது.

பின்லந்தில் விவசாயிகள் அதிகம், அவர்கள் வாழ்க்கை சாதாரணமானது. நவீன நாகரிகம் கொஞ்சம் கொஞ்சமாகப் பாவி பின்லந்தை முன்னேற்றிக் கொண்டே வருகிறது.

பின்லந்து வாசிகளிடம் மங்கோலிய ஜாதியினரின் பூர்வீக வாசனை இருக்கிறது. ஸ்லோவோக் வம்சத்திற்கும் பின்னிஷ் ஜாதியினருக்கும் பிணைப்பு உண்டு.

இத்தகைய சுதந்தர நாட்டை ரஷ்யா மீண்டும் ஆக்ரமித்துக் கொள்ளுமா? போகப் போகப் பார்ப்போம்.

### ஹிட்லரைத் தோற்கடிக்க யூதர்கள் உதவி

ஹிட்லரைத் தோற்கடிக்க உலகிலுள்ள எல்லா யூதர்களும் நேச தேசங்கட்குப் பொருளுதவி செய்யவேண்டுமென்று ஒரு யூதர் சொல்கிறார். உலகிலுள்ள 160 லட்சம் யூதர்களும் உதவி யளிப்பதானால் வருடத்தில் இரண்டாயிரம் கோடி பவுனுக்கு மேல் வருமானமாம்.

# வீராஸ்தமனம்

(த. ரா.)

அங்கம் 1

[திரோரி அடர்களத்திலிருந்து ஒருமைல் தொலையில் உள்ள ஒரு சிறு கிராமம். அந்த கிராமத்திலே வீரஸிம்ஹன் தங்கியிருக்கும் சிறு வீடு. விமலாவும் திலோத்தமாவும் அந்த வீட்டுத் திண்ணையில் முக வாட்டத்தோடு நிற்கின்றனர்.]

காலம்:—ஸூரியாஸ்தமனம் கழிந்து மெல்லென இருள் பரவும் தருணம்]

விமலா:—இன்னும் காணவில்லையே...

திலோ:—யுத்தம் முடிந்திராது.

விமலா:—இல்லை, ஏதாவது ஆபத்து...

திலோ:—அடர் களத்தில் ஆபத்து வருவது சகஜந்தானே.........

விமலா:—(முகங்கோணி) ஆனாலும், நாம்...பெண்கள்......

திலோ:—சாதாரணப் பெண்களல்ல.ராஜபுத்திர ஸ்த்ரீகள்.

விமலா:—(காற்றில் பறந்து விழுந்த சேலையை இழுத்துத் தலையில் போட்டு ஒழுங்கு படுத்திய வண்ணம்)நீபெண்ணாய்ப் பிறக்க வேண்டியவளல்ல. (ஆத்திரத்தோடு)உனக்குத் தெரியாது திலோத்தமா கணவன் பேரில் மனைவிக்குள்ள அன்பைப் பற்றி.

திலோ:—சகோதரன் பேரில் சகோதரிக்குள்ள அன்பைப்பற்றி உனக்குத் தெரியாது.

விமலா:—தெரிந்திருந்தால் நீ இப்படி பதட்டமின்றிப் பேச மாட்டாய்.

திலோ:—பதட்டத்தால் என்ன பிரயோஜனம்? யுத்தம் என்பது நமக்குப் புதிதல்ல.

விமலா:—யுத்தம் புதிதல்லாவிட்டாலும் நீ மட்டும் புதிதாகத் தான் இருக்கிறாய்—உன்னில் பெண்மையே இல்லை.உன் இருதயம் வஜ்ஜிரத்தையும் விட கடினமானது. பச்சாத்தாப மற்றது. ஈ விரக்கமற்றது...

திலோ:—(நகைத்து) அப்புறம்.........

விமலா:—நீ கொடிய ராக்ஷஸி.........

(வீரஸிம்ஹன் பரபரப்போடு பிரவேசிக்கிறான்)

விமலா:—(ஓடி முன்வைத்து) பிராணநாதா!

வீரஸிம்:—ஆ! என்ன பயங்கரம் (உடலிலிருந்து வழிந்து கொண்டிருக்கும் ரத்தத்தைத் துடைக்கிறான்.)

விமலா:—என்ன ரத்தப் பிரவாகம்... (சேலைத் தும்பால் வீரஸிம்ஹன் காயங்களைத் துடைக்கிறாள்.) நல்ல வேளை, உயிர் தப்பி வந்தீர்களே என் மாங்கல்ய பாக்கியம்.

வீரஸிம்:—ஐயோ! என்ன பயங்கரம்! என்ன பயங்கரம்!!

திலோ:—அண்ணா!என்ன பயங்கரம்?

வீரஸிம்:—எத்தனை உயிர்கள் பலியாயின.

திலோ:—யுத்தம்? யுத்தம்? இரக்கம் காட்டுவதெல்லாம் அப்புறம்.

வீரஸிம்:—சித்தூர் சேனை முறியடிக்கப்பட்டது.

திலோ:—என்ன?

வீரஸிம்:—அப்கானியர் எதிர்ப்பைத் தடுக்க முடியவில்லை.

திலோ:—அரசன் ஸமரஸிம்ஹன்?

வீரஸிம்:—சிதறுண்ட சேனையை ஒன்று சேர்க்கிறார்.

திலோ:—தில்லி வேந்தன் பிருத்விராஜன்?

வீரஸிம்:—சிங்கத்தைப் போல வீர கர்ஜனை செய்து போரை நடத்துகிறார்.

திலோ:—நீ முதுகு காட்டி ஓடிவந்தாய்? ச்சீ! இவ்வீட்டில் நுழையாதே பாவி தாய் நாட்டை அந்நிய எதிர்ப்பிலிருந்து பாதுகாக்காமல் பேடிபோல் ஓடிவந்தாய்?

வீரஸிம்:—திலோத்தமா!

திலோ:—வீரமில்லை உனக்கு? ராஜபுத்திர வம்சத்திற்குக் களங்க முண்டாக்காமல் சாகிறது தானே. அரசனையும் நாட்டையும் ஆபத்து வேளையில் உபேக்ஷித்து வந்த கோழை, இங்கு உனக்கு இடமில்லை உம்!

வீரஸிம்:—நான்......நான்......

திலோ:—உம்! உருவு கட்கத்தை, ஓடு அடர்களத்திற்கு.

வீரஸிம்:—(விமலாவை பரிதாபத்தோடு நோக்கி) விமலா!

திலோ:-விமலாவா? கடமையை மறந்து உளறாமல் அடர்களத்திற்குச் செல். சீக்கிரம்.

வீரஸிம்:-கடமையை மறக்கவில்லை. நான் கோழையுமல்ல. ஐயோ! உயிர் வதை......அந்த ஹீனம்செய்தல்......

திலோ:-உன் உள்ளத்தில் இரக்கத்திற்கு இடமில்லை. உம்! தயங்காதே அண்ணா............

வீரஸிம்:-கொஞ்சங்கூட இரக்கமில்லையே.

திலோ:-இரக்கமா! நீ வீரசொர்க்கமடைந்த பிறகு (விமலாவைச் சுட்டிக் காட்டி) அவள் பேரில் இரக்கம் காட்டுகிறேன். கடமையைச் செய்யத் தவறிவிட்ட ராஜபுத்திரனின் மனைவி என்பதற்காக. உம்! விழித்து நிற்காதே.........

வீரஸிம்:-ஐயோ! வீரமில்லாததால் அல்ல திலோத்தமா. தேச பக்திக் குறைவால் அல்ல. ராஜபக்திக் குறைவாலும் அல்ல.........அவள்........விமலா.............. கர்ப்பவதி.........குழந்தை.........

திலோ:-அதனால் என்ன? கடமையை மறந்த பேடியைத் தந்தையென அழைக்கக் குமாரன் பிறப்பதைக் காணவுள்ள ஆவலா உன்னை இப்படிச் செய்யத் தூண்டிற்று? அப்படியானால் அவன் பிறப்பதும் பிறக்காதிருப்பதும் நன்றே.

வீரஸிம்:- அடி காதகீ! என்ன சொன்னாய்?

திலோ:-ஆம்! அவன் பிறப்பதைவிட பிறக்காமலிருப்பதே நலம். ராஜபுத்திர உலகம் அவனை இழிக்கும், ஒரு கோழையின் குமாரன் என்பதற்காக.

வீரஸிம்:-(பற்களைக் கடித்தவண்ணம்) ராக்ஷஸி! சண்டாளி!

(விரைந்து அடர் களத்தை நோக்கி ஓடுகிறான்)

விமலா:-நாதா! நாதா............(தடுக்க ஓடுகிறாள்)

வீரஸிம்:-(திரும்பிப் பாராமல்) அந்த பேயிடம் முறையிடு.

திலோ:-விமலா பேத்தாதே.

விமலா:-(கண்ணீர் உதிர்த்து) திலோத்தமா!............திலோத்தமா!........

(கதறியழுகிறாள்.திலோத்தமா விமலாவைத் தாங்கி வீட்டுக்குள் நடத்திச் செல்கிறாள்.)

அங்கம் II

[வீரஸிம்ஹன் வீட்டுப் படுக்கை அறை. விமலா தூங்காமல் பெரு மூச்சு விட்டும் விசித்துக்கொண்டு மிருக்கிறாள், திலோத்தமா கண்களை மூடியவண்ணம் சிந்தனையிலாழ்ந்திருக்கிறாள்.

திறந்து கிடக்கும் சாளரத்தினூடே ஆகாய மண்டலம் தெரிகிறது. வானில் ஆங்காங்கு இரண்டொரு நக்ஷத்திரங்கள் மேகப் படலங்களைக் கிழித்துக்கொண்டு பிரகாசிக்கின்றன. விமலா ஆகாயத்தை நோக்கி இருந்தபடியே, தன்னையும் அறியாமல் தூங்கிவிடுகிறாள். மெல்லென காற்று சாளரத்தினூடே வீசி, திலோத்தமாவையும் பாதி தூக்கத்தில் ஆழ்த்துகிறது.

சாமம்: இரவு மூன்றாம் ஜாம ஆரம்பம்.]

விமலா:-(தூக்கத்தில் அலறி எழுந்து) அவர்.........அவர்.........

திலோ:-(தூக்கங் கலைந்து) என்ன என்ன?

விமலா:-ஐயோ! அவர்.........

திலோ:-ஏதாவது சொப்பனங் கண்டாயா என்ன?

விமலா:-அவர்......வீர சொர்க்கம்...... (வெறித்துப் பார்த்த வண்ணமிருக்கிறாள்)

திலோ:-சாந்தமாயிரு வெறுங் கனவு தான்.

விமலா:-இல்லை, இல்லை. உண்மை, பயங்கர உண்மை, அதோ ரத்த ஆறு ஓடுகிறது. (விழிகள் எழும்பி) அதோ அந்த ரத்த ஆறிலே அவர்.........அவர்.........

(பொத்தென படுக்கையில் வீழ்கிறாள்.)

(திலோ எழுந்து விமலா பக்கம் சென்று, அவள் சிரசை எடுத்து மடியில் வைத்து, நெற்றியைத் தடவிக் கொடுத்த வண்ணம்) விமலா!விமலா......(மௌனம்) தூங்கு விமலா, தூங்கு. ராஜபுத்திர பெண்ணாகப் பிறந்தால் மட்டும் போதாது. கடின இருதயங்கூட வேண்டும். ஆனால் உனக்கு இளகும் உள்ளத்தை வைத்துப் படைத்துவிட்டான்...... ..

(இதன் தொடர்ச்சி 9-ம் பக்கம்)





## நோட்டீஸ்

### தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

O. S. 56 of 1939.

கா. சுப. சுப்பையா அம்பலம் — வாதி

சுப்பையா செட்டியார் என்ற சுப்பிரமணியன் செட்டியார் } பிரதிவாதி

வாதிக்குப் பிரதிவாதி 5-12-1936உயில் எழுதிக் கொடுத்திருக்கிற அடமானப் பத்திரப்படிக்குள்ள துகையை வசூலிப்பதற்குப் பிராது செய்து முடிவான பைசலுக்கு 7-12-1939உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை உண்டானால் ஷை வாயிதாவன்று கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளலாம். தவறினால் எக்ஸ்பார்ட்டியாகத் தீர்ப்புச் செய்யலாகும்.

M. நாகசாமி அய்யர்,
17-11-39 வக்கீல்.

## காரைக்குடி பஞ்சாயத்துக்கோர்ட்டு

1939 ஷை சூட் கிர் 69

M. துரைக்கண்ணு பிள்ளை — வாதி
T. M. நடராஜன் —பிரதிவாதி

பிரதிவாதிக்கு அறிவிப்பதாவது:—

வாதி உமது பேரில் ரூ 35-12-6க்கு பிராது செய்திருப்பதில் உமக்கு சமன்கள் பல முறை அனுப்பியும் சார்வாகாததினால் ஷை பிராதை முடிவுசெய்ய 23-11-39உ வாயிதா போட்டிருக்கிறது. அன்று பகல் 2 மணிக்கு நம்முன்பாக ஆஜராக வேண்டியது. தவறினால் எக்ஸ்பார்டியாக முடிவு செய்யப்படும்.

PN. M. M. PL.
Venkatachalam Chettiar,
18—11—39. பிரஸிடெண்டு



## புத்தகங்களுக்கருகே துப்பாக்கிகள்!

### நவம்பர் 14உ செவ்வாய்

பாரிஸ்மீது வட்டமிட்ட ஒரு ஜெர்மன் பாம் போடும் விமானத்தை பிரான்ஸ் விமானங்கள் தாக்கின. ஜெர்மன் விமானம் தீப்பிடித்து கீழே விழுந்து நாசமாயிற்று.

'நாஜி ஜர்மனியின் நாலாண்டுப் போர்த் திட்டம்' மிக ஜரூராகப் போடப்பட்டிருப்பதாக 'பாலிடிகன்' பத்திரிகையின் பெர்லின் நிருபர் எழுதுகிறார். பிரிட்டன் துறைமுகத்தை முற்றுகையிட திட்டம் போடப்பட்டு இதனை நடத்த ஆல்பர்ட் ரோசன் பர்க் நியமிக்கப்பட்டுள்ளார். இது நெப்போலியனின் திட்டத்தைப்போன்று பலமானதாக இருக்குமாம்.

### அன்று ஸ்டாலின் கொடுத்த "வரம்" இன்று பலிக்குமா?

சோவியத் பின்லந்து தகராறு சம்பந்தமாக மாஸ்கோவுக்குச் சென்றுள்ள தூது கோஷ்டியினரில் ஒருவர் ஸ்டாலினிடம் ஒரு முக்கியமான கடிதத்தைக் காட்டுவார். அது ஸ்டாலின் அவருக்கு அளித்த வரம்—எழுதப்பட்டுள்ள சீட்டு. இதனால் சமரசமேற்பட மார்க்க முண்டாகலாமாம். இந்த சீட்டைக் கொண்டுபோகிறவர் பெயர் டானர். இவர் பின்லந்தில் முன்பு முதன் மந்திரியா யிருந்தவர். இப்போது பொக்கிஷ மந்திரியா யிருக்கிறார். இந்த சீட்டுக் கதை ருசிகரமானது. 1905ம் வருஷம் ஸ்டாலின், ரஷ்ய சக்ரவர்த்தி ஜாரின் ஆட்களால் துரத்தப்பட்டு ஓடி வந்தார். அச்சமயம் டானர் பின்லந்தில் ஒரு ஆர்வமுள்ள இளைஞராக வாழ்ந்து வந்தார். டானர் சமதர்ம நோக்க முடையவர். எனவே அவர் ஸ்டாலினுக்கு அபயமளித்துக் காப்பாற்றினார். பிறகு டானர் பின்லந்தில் பதவிபெற்றார். ஸ்டாலின் ரஷ்யாவின் தலைவரானார். 1917ல் டானர் மாஸ்கோவுக்குத் தூது சென்றார். அச்சமயம் ஸ்டாலின் டானரிடம் ஒரு சீட்டைக் கொடுத்தார். அதில் "ரஷ்யா என்றும் பின்லந்தின் சுதந்தரத்துக்கு மதிப்புக் கொடுக்கும்" என்ற உறுதிமொழி எழுதப்பட்டிருந்தது. அந்த சீட்டைத்தான் இப்பொழுது கொண்டுபோயிருக்கின்றார்.

## ஸ்டாலினை ஒழிக்க ஹிட்லர் முயற்சி

### ரஷ்ய—பின்லந்து சமரசம் முறிவு

### பிளாம்பர்க் நொலை :: நாஜிகள் அட்டூழியம்

பெல்ஜிய—டச்சு சமாதான வேண்டுகோளுக்கு ஜெர்மனியின் பதில் இன்று பிற்பகலில் டச்சு பெல்ஜிய தூதர்களிடம் கொடுக்கப்பட்டது. ஸ்டாக் ஹோமில் வெளியாகும் 'அப்டன் பிளாடட்' பத்திரிகையின் பெர்லின் நிருபர் இந்த தேசங்களது மத்தியஸ்த முயற்சியை மிக்க மரியாதையாக ஏற்க ஹிட்லர் மறுத்துவிட்டதாகக் கூறுகிறார்.

### 15உ புதன்

லாகுனியாஸ் என்ற ஊரில் எண்ணெய் ஊற்று தீப் பிடித்துக்கொண்டதால் ஊர் பூராவும் அழிந்துவிட்டது. பலர் மாண்டனர்.

பலத்த எதிர்ப்புக் கிடையே பிரிட்டிஷ் விமானங்கள் ஜெர்மனிமீது பறந்து நூற்றுக் கணக்கான படங்களை எடுத்தன.

பாரிஸ் வட்டாரத்தில் பீரங்கிச் சப்தம் கேட்டபடி இருந்தது.பிரிட்டிஷ்மந்திரிகளான சர்ச்சில், பால்டுவின் விக்கின்ஸ் ஆகியோர் பேட்டி கண்டு பேசினர்.

### ஸ்வீடன் ஜெர்மன் ஒப்பந்தம் முறிந்தது

ஸ்வீடனுக்கும் ஜெர்மனிக்கும் இடையே நடந்து வந்த வியாபார ஒப்பந்தப் பேச்சு முறிந்துவிட்டது. பிரிட்டனை முற்றுகையிடுவதற்கு ஸ்வீடன்உதவிசெய்ய வேண்டுமென்று ஜெர்மனி கேட்டதாம். இதற்கு ஸ்வீடன் சம்மதிக்காததால் ஒப்பந்தம் முறிந்துவிட்டதாம்.

### மடத்தில் கெஸ்டாபோ கொடுமை

கிராலாவ் என்ற ஊரிலுள்ள ஒரு கிறிஸ்தவ மடத்திற்குள் ஜெர்மன் கெஸ்டாபோ ஆட்கள் நுழைந்து அங்கிருந்த பாதிரிகளைப் பிடித்து இம்சித்தனர்.உணவுகளை எடுத்துப் பைக்குள் போட்டுக் கொண்டனர். இந்த மடம் தென் அமெரிக்காவிலுள்ள பிரேஜில் நாட்டின் நன்கொடைத் தொகையினால் நடந்து வந்தது. பிரேஜிலிய சர்க்கார் இச்செயலைக் கண்டித்து ஜெர்மன் சர்க்காருக்கு எழுதினர். பிறகு பாதிரிகள் விடுவிக்கப்பட்டனர். ஆனால் மடத்தில் பாதிப் பாகம் ஜெர்மன் ஸோல்ஜர்களின் விடுதியாக மாற்றப் பட்டது!

லெனின் கிரேடுக்கு எதிரிலுள்ள பின்லந்துக்குச் சொந்தமான கரிவியா என்ற பிரதேசத்திற்கு மேலே பறந்த சோவியத் விமானங்கள்மீது பின்லந்துப் படைகள் பீரங்கிப் பிரயோகம் செய்தன.

### ஸ்டாலினை ஒழிக்க ஹிட்லர் திட்டம்

'டெம்ப்ஸ்" என்ற பத்திரிகையின் நிருபர் அறிவிப்பதாவது:—

ஸ்டாலினை ஒழித்துவிட்டு அவருக்குப் பதிலாக மொலடவ் அதிகாரத்திற்கு வரும்படி செய்யவேண்டுமென்பதே ஹிட்லரின் ஆவல். மொலடவின் ஆதரவைக் கொண்டு ரஷ்யாவில் ஒரு உருவான முன்னேற்றத் திட்டம் கையாளப்பட வேண்டுமென ஹிட்லர் கருதுகிறார். மொலடவ் ஜெர்மனியை ஆதரிக்கும் மனோபாவமுள்ளவர். அவரது மனைவி ஒரு ஜெர்மன் பெண் என்பது குறிப்பிடத் தக்கது. ஸ்டாலினோ போலந்து பால்டிக் இவை சம்பந்தமாக கொண்டுள்ள நோக்கங்களை ஈடேற்றிக் கொள்ளவும், ஜெர்மனியைப் போல்ஷ்விக் மயமாக்கவும் இதுவே சமயமென எண்ணுகிறார். பிறகு

## போலந்தில் ஜெர்மனியர் அவதி

மேற்கு ஐரோப்பாவில் அவ்வியக்கத்தை பரப்பலா மென்பது அவரது கருத்து.

ஒரு கடற் சுரங்க வெடிமீது மோதிய ஒரு பிரிட்டிஷ் நாசகாரிக் கப்பல், மூழ்கிப் போயிற்று.

"மர்த்ரா" என்ற பிரிட்டிஷ் சாமான் கப்பல் ஒன்றும் ஷை நாசகாரிக் கப்பல் மூழ்கிய ஒரு மணி நேரத்திற் கெல்லாம் ஒரு வெடி விபத்திற்குள்ளாகி மூழ்கியது. இக் கப்பல் நாசகாரி கப்பலிருந்த இடத்திற்கு ஒரு மைல் தூரத்திலிருந்தது. இதன் எடை 8000 டன்.

'கிரெஸ்வெல்' என்ற 275 டன் எடையுள்ள பிரிட்டிஷ் மீன்பிடிக்கும் கப்பல் சப்மரீன் ஒன்றினால் மூழ்கடிக்கப் பட்டது.

நார்வே கப்பல் ஒன்றை ஒரு ஜெர்மன் சப்மரீன் டார்பீடோ குண்டைப் பிரயோகித்து மூழ்கடித்தது.

வடகடலில் 2 வாரத்திற்கு முன்பு மூழ்கிப் போன ஒரு கப்பலின் உடைந்து போன பாகங்களின் மீது மோதியதால் 2 பிரிட்டிஷ் கப்பல்கள் சேதமடைந்து மூழ்கிப் போயின.

ஒரு ஜெர்மன் சப்மரீன் பிரிட்டிஷ் யுத்தக்கப்பல்களின் குண்டுப் பிரயோகத்தால் அழிக்கப்பட்டு விட்டதென நம்பப்படுகிறது.

ஸார் நதிக்குக் கிழக்கேயுள்ள பிரதேசத்தில் ரோந்து கோஷ்டிகளின் வேலை மும்முரமாக நடந்தது.

ரைன் நதியின் கீழ்பாகத்தில் நல்ல வெள்ளப்பெருக்கு ஏற்பட்டிருக்கிறது.

ஹிட்லர் சிறிய நாடுகளை சதா நடுங்கிக் கொண்டிருக்கும் படியான நிலையில் வைத்திருக்கும் முறையைத் திரும்பக் கையாளுவாரென்றும், அடுத்தபடியாக அவர் ஹாலந்து பெல்ஜியம் நாடுகளுக்கு விரோதமாகப் பத்திரிகைகளில் பிரசாரத்தை ஆரம்பிப்பார் என்றும் பாரிஸிலுள்ளவர்கள் எதிர்பார்க்கின்றனர்.

(இதன் தொடர்ச்சி 8-ம் பக்கம்)

குமரன்

காரைக்குடி
பிரமாதி-ஸு கார்த்திகை-மீ 8உ

## ஆக்க வேலை

காங்கிரஸ் திட்டத்தில் ஆக்க வேலை ஒரு முக்கியமான பகுதியாகும். இதனை அழுத்தமாகச் செய்ய வார்தா திட்டம் மிக்க உதவி யளிப்பதாக இருக்கிறது. அதனைக் கல்வித் துறையில் சேர்த்துப் பரப்பச் செய்த முயற்சி முற்றுப்பெற வில்லை. அதற்குள் மந்திரி சபை ராஜீனாமா ஏற்படவேண்டியதாகி விட்டது. கல்வி எவ்வளவு முக்கியமோ அதை விட கைத்தொழில் முக்கியமாக இருக்கிறது. கோடிக்கணக்கான மக்கள் தொழிலின்றித் தவிக்கின்றனர். நூற்றுக்கணக்கான தொழில் செய்வாரின்றித் தவிப்பதையும் காணலாம். அயல் நாட்டிலிருந்துவரும் கைத்தொழில் பொருள்கள் பலப்பலவாக இருக்கின்றன. அவை யாவற்றையும் இங்கே செய்வதில் கஷ்டமொன்றுமில்லை. கோடிக்கணக்கான கைகள் வெறுமே தொங்கவிடப்பட்டிருக்கின்றன. அவைகட்கு வேலை கொடுக்கத் தொண்டர்களும் தலைவர்களும் முற்படுதல் அவசியமாகும். அரசாங்க உதவி இதற்கு மிகுதியும் தேவை. பரிபூரண உதவியை மற்றைய நாட்டு அரசாங்கம் செய்கின்றது. பொதுஜனங்களும் ஊக்கங்கொண்டு தொழிலைச் செய்ய முற்படுகின்றனர். ஜனத் தலைவர்களும் கைத்தொழிலின் இன்றியமையாமையை உணர்ந்து உழைக்க முற்படுகின்றனர்.

நமது நாட்டில் மூன்றும் பின்வாங்கி நிற்பதனாலேயே கைத்தொழில் வெறும் வாய்த் தொழிலாக இருந்து வருகிறது. சாதாரணமான கதர்த் தொழில் இன்னும் கைப்பிள்ளையாகத் தானிருக்கிறது. இதே விட்டால் அதன் வளர்ச்சி எங்கே போய்முடியுமென்பதில் பெருங் கவலை கொள்ள வேண்டியதைத் தவிர வேறில்லை. 'இன்னும் கெஞ்சியும், கூப்பன் அச்சிட்டும் விற்பனை செய்தாக வேண்டிய நிலைமை தான்! இந்த ஒரு தொழிலே சுமார் 20 வருஷ முயற்சிக்குப் பின்னரும் குழந்தையாக இருக்குமானால் மற்ற எந்தத் தொழிலே எப்படி யபிவிருத்தி செய்வ தென்பதில் யாருக்கும் கவலைப்பு ஏற்படுவதில் அதிசயமொன்று மில்லை. தேச முழுமையுமுள்ள மக்கள் ஏதாவது தொழில் செய்து ஜீவிக்காமல் முடியாது. அந்தந்த இடத்திற்குப் பயிற்சிக்கும் தக்கவாறு தொழில்களை அபிவிருத்தி செய்தல் வேண்டும். இந்த யோசனைக்கும் சிற உதவிக்கும் ஊக்க முண்டாக்குதற்கும் தலைவர்கள் தொண்டர்களின் முயற்சி அவசியமாக இருக்கிறது. காந்திஜிஜே பாரதமாதாகிஜே என்ற சப்தம் வானை இடிக்கும்படி ஆரவாரம் செய்யும் நமது தொண்டர்கள் கலப்பையைப் பிடித்தோ காண்டியைத் திருப்பியோ கற்ற வித்தைகளைக் குழந்தைகட்கும் பெரியவர்க்கும் கற்பித்துக் காலணாவாவது சம்பாதித்து உயிர்வாழ வழிகாட்ட வேண்டும். மேடையில் பிரசங்கம் செய்து தொண்டர் படை திரட்டிப் பணக்காரருக்கு ஊழியம் புரிவதில் தேசநலம் வளராதில்லை'. செல்வர்களின் பொருள் ஏழை மக்கட்கு நேரானவழியில் பயன்பட வேண்டும். ஏழைகளின் கரங்கள் தொழிலால் பண்பட வேண்டும். நாட்டின் செழிப்பிற்கு அடிப்படையாக இருப்பது கைத்தொழிலாகும். அரசியல் சுதந்திரத்திற்குப் படும் பாட்டின் பயன் மக்களின் இனிய வாழ்வே யாகும். அந்த வாழ்வு விவசாயத்தாலும் கைத்தொழிலாலுமே கிட்ட வேண்டும். தேசிய ஆட்சிக்கு—இவ்விரு வகை வருவாயினாலேயே இனிய வாழ்வு நிலையாக இருக்கமுடியும். சுதந்திரத்தில் பேராவல் கொண்டு முன்னிற்கும் இந்த தேசமானது கைத் தொழிலில் கரை கடந்த ஆவல் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறது. இந்த ஆக்கவேலைப் பகுதியை இப்பொழுது வார்தா திட்டத்தைக் கைப்பற்றி நாட்டில் தொண்டர்கள் பலரும் ஆங்காங்கே முற்பட வேண்டும். ராஜாஜீ மந்திரி வேலையை விட்டால் வார்தா திட்ட உபாத்தியயராக விரும்புகிறார் என்ற செய்தி எவ்வளவு ஆழமான பொருளுடைய தென்பது உணரத்தக்கதாகும்.

இப்பொழுதிருக்கிற விவசாய இலாகாவும் கைத் தொழிலிலாகாவும் நம் நாட்டு மக்களுக்கு உதவியளிப்பதாக இல்லை. ஐந்து ரூபா செலவில் அரைக்கால் ரூபா வரும்படி அளிக்கும் வழியில் அபிவிருத்தி யாகிச் செல்வதை அதில் ஈடுபடு வாரறிவர். சரியானபடி நாட்டையும் விவசாயிகளையும் உணர்ந்து இந்த இலாகா சீர்திருந்துமென்று நம்ப இது சமயமல்ல. தலைவர்களும் தொண்டர்களும் படபடப்பான மோகத்தை விட்டுவிட்டு— போலியான கூப்பாட்டை யொழித்து விட்டு ஆக்கவேலையை நோக்குதல் வேண்டும். தங்கள் கிராமத்தைச் சுற்றிலுமுள்ள மக்கள் வார்தா திட்டத்திலும் கைத்தொழில், கல்வி யறிவிலும் ஈடுபடுமாறு செய்யும் முயற்சியிலீடுபடுதல் வேண்டும். பட்டினங்களிலும் பொட்டல்களிலும் போடும் கூப்பாட்டின் பயன் ஒவ்வொரு கிராமத்திலும் வார்தா திட்டம் பயனளிப்பதற்கு அடிகோலுவதாக இருக்கட்டும்.

---

### காரைக்குடி நகர சபை

நகரசபையின் சாதாரணக் கூட்டம் நவம்பர் 25உ மாலை 5 மணிக்கு நகர சபைக் கட்டடத்தில் நடைபெறும்.

---

### காரைக்குடியில் கும்பாபிஷேகம்

காரைக்குடி நகரச் சிவன் கோயிலுக்கு அணித்தாயுள்ள பிள்ளையார் கோயிலிருந்த பிள்ளையார் சிலைக்குச் சிறிது பின்னம் ஏற்பட்டதன் காரணமாக புதுப் பிள்ளையார் செய்து நவம்பர் 22உ புதன்கிழமை காலை 9 மணிக்கு மருந்து சாத்தி மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. தனவணிக ஆண் பெண் மக்கள் ஏராளமாகக் கூடியிருந்தனர்.

---

### ஹிந்து மதாபிமான சங்கம்

#### ஆண்டு விழா ஒத்திவைக்கப்பட்டது

நவம்பர் 26உ நடப்பதாக இருந்த ஹிந்து மதாபிமான சங்கத்தின் 22-ம் ஆண்டு விழா, ரயில் போக்கு வரத்து சரியின்மை காரணமாக ஒத்திவைக்கப்பட்டிருப்பதாகக் காரியதரிசி அறிவிக்கிறார்.

---

### நெருக்கடி தீரும்வரை

#### நாம் செய்ய வேண்டியது

தற்போதய அரசியல் நெருக்கடி தீரும் வரை நாம் என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றி ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் சென்னையில் பேசியபோது தெரிவித்தார்:

'நெருக்கடி தீரும்வரை ஏதாவது நல்ல காரியம் செய்யவேண்டும். ஜனங்களுக்கு எழுத்தறிவிக்கப் பிரயத்தனப்படலாம். அப்படிச் செய்தால் ஓட்டர்கள் அதிகமாவார்கள். அடுத்த தடவை நாம் தேர்தலுக்கு நிற்கும்போது நமக்கு இன்னும் அதிக ஓட்டர்கள் ஆதரவு அளிப்பார்கள், அடுத்தபடியாக நாம் மதுவிலக்குக் கொண்டுவந்திருக்கும் ஜில்லாக்களில் மதுவிலக்கு நன்கு அமுலிலிருக்கும்படி செய்யலாம். அந்த சீர்திருத்தத்தை ஜாக்கிரதையாகக் காப்பாற்றலாம்'

---

பின்லண்டுப் பாதுகாப்புக் கடன் நிதிக்கு 150 கோடி பின்னிஷ் மார்க்குகள் வசூலாகி யிருக்கின்றன.

## வ. உ. சிதம்பரம் பிள்ளை தினம்

18—11—39

காரைக்குடி

மாலை 6-மணிக்கு காங்கிரஸ் மாளிகையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு காந்தி சதுக்கத்தை அடைந்தது. ஸ்ரீ ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியார் தலைமையில் பொதுக்கூட்டம் ஆரம்பமாகியது. ஸ்ரீ தி. ம. நடராஜன், சென்னை ஸ்ரீ பி. ராமமூர்த்தி ஆகியோர் பேசினர். தலைவர் முடிவுரைக்குப்பின் இரவு 8-30 மணிக்கு கூட்டம் முடிவடைந்தது.

### புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி தலைமையில் கொண்டாடப்பெற்றது. அவ்வமயம் ச. வி. மாணவ மாணவிகள் சொற்பொழிவாற்றினர். சிதம்பரம்பிள்ளை அவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் பற்றி ஸ்ரீ பூதலிங்கமும், ஸ்ரீ வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியாரும் சொற்பொழிவாற்றினர்கள். வந்தன வாழ்த்துடன் கூட்டம் நிறைவெய்தியது.

---

### சாரணர் நிதிக்காக நாடகம்

காரைக்குடி ஷண்முக விலாஸ் தியேட்டரில் 20—11—39 இரவு 9-30 மணிக்கு லோகல் சாரணர் சங்கத் தலைவர் ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் கோ. அழகாபுரி சாரண சங்கத்தாரால் 'கள்வர் தலைவன்' எனும் நாடகம் நடத்தப் நடத்தப்பட்டது.

தலைவர் பேச்சுக்குப்பின் ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் சிறிது பேசினர்.

---

### ஜெர்மன் முதலாளி ஓட்டம்

பிரபல ஜெர்மன் எஃகுக் கம்பெனியின் முதலாளியான பிரிட்ஸ் தைஸன் என்பவர் ஜெர்மனியிலிருந்து ஓடிவிட்டாராம். இவருடைய சொத்துக்களும் வீடுகளும் பல முறை பறிமுதல் செய்யப்பட்டிருக்கின்றன.

---

### காரியக் கமிட்டிக் கூட்டம்

காரியக் கமிட்டிக் கூட்டம் அலகாபாத்தில் ஆனந்தபவனத்தில் நடந்து வருகிறது.

காந்திஜிக்கு காரியக் கமிட்டியினர் சர்வாதிகாரம் அளிப்பார்கள் என்று சொல்லப்படுகிறது.

---

### மெ. பெரி. பெரி. தர்ம கலாசாலை

#### கண்டரமாணிக்கம்

இப்பாடசாலையின் மானேஜர் திருவாளர். மெ. பெரி. மெ. இராமநாதன் செட்டியார் தீபாவளிப் பண்டிகைக்கு ஷெ கலாசாலையில் படிக்கும் மாணவ மாணவிகளுக்கு உடைகளும் சிற்றுண்டிகளும் வழங்கினர்.

---

நவம்பர் 20உ பிற்பகல் லண்டன்மீது ஜெர்மன் விமானம் பறந்தது. எதிர்ப்புப் பீரங்கிகள் பிரயோகிக்கப்பட்டன.

ரோர்மாண்டுக் கருகில் ஒரு ஜெர்மன் விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது.

மேற்குப் போர் முனையில் மழையால் வேலைத் தடைப்படுகிறது.

பிரிட்டனில் அளவுப்படி உணவு விநியோகிக்கும் முறை ஏற்படுத்தப்படும்.

பிரிட்டிஷ் கப்பலான 'பென்சில்வா' ஜெர்மனியாது நடவடிக்கையால் மூழ்கடிக்கப்பட்டது. "டார்சபேரர்" என்ற நிலக் கரிக் கப்பல் ஜெர்மன் சுரங்க வெடியில் மோதி மூழ்கியது. பிரஞ்சுக் கப்பலொன்றும் சுரங்க வெடியில் மோதி மூழ்கியது. லிதுவேனியக் கப்பலான 'காஸ்' மூழ்கியது. வடகடலில் 'விக்மோர்' என்ற கப்பல் சுரங்க வெடியில் மோதி மூழ்கிப் போயிற்று.

ஜப்பானுக் கருகில் ஒரு வெள்ளை நிறக் கப்பல் பார்க்கப்பட்டது.

ஜெர்மன் அடக்கு முறை காரணமாக இதுவரை 50,000 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

ஜெர்மன் துறைமுகத்தைத் தாக்க பிரிட்டிஷ் விமானங்கள் முயற்சிசெய்தன.

பிரிட்டிஷ்—பிரஞ்சு பொக்கிஷ மந்திரிகளிடையே—பொருளாதார சம்பந்தமாக ஒரு ஒத்துழைப்பு உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது.

## மீண்டும் சமரச முயற்சி

### ராஜப் பிரதிநிதி நம்பிக்கை

இராஜப் பிரதிநிதி சமரச முயற்சியைக் கைவிட்டு விடவில்லை. மீண்டும் இந்தியாவிலுள்ள பெரிய கட்சிகளுக் கிடையே சமரசம் ஏற்படுத்துவதற்கான முயற்சியில் இறங்குவார். தலைவர்கள் தற்போது சட்ட மறுப்பு கிடையாதென்று சொல்லியிருப்பதால் நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. வைஸ்ராய் தமது நம்பிக்கையை இழக்காத வரையில் காரியக் கமிட்டிக் கூட்டம் முடிந்த பிறகு சிநேகப்பான்மையுடன் கூடிய ஒரு ஒப்பந்தம் ஏற்பட முயற்சி நடக்கும். ஜனப் ஜின்னுவும், பண்டித நேருவும் கலந்து பேசி காங்கிரஸ் லீக் ஒப்பந்தம் ஏற்படுத்திவிட்டால் மற்ற காரியங்கள் சுலபமாகிவிடும் என்று நம்பப்படுகிறது.

---

### முசோலினியார் வழிக்கு வருகிறார்

#### காலனிகள் வேண்டுமோம்!

வீனர்கேடா ரேடியோவில் பின்வருமாறு ஒப்பாரி வைத்தார்:

"காலனிப் பிரச்னைக்கு ஒரு பரிகாரம் ஏற்படுமென இத்தாலி எதிர்பார்க்கிறது. வெர்ஸேல்ஸ் ஒப்பந்தத்தின் மூலம் இத்தாலிக்குத் துரோகம் செய்யப்பட்டுவிட்டது. அவ்வுடன்படிக்கையின்படி அந்நாட்டுக்கு காலனிகள் எதுவும் கொடுக்கப்படவில்லை."

இத்தாலியின் நியாயமான கோரிக்கைகள் பூர்த்திசெய்யப்படும் வரை அந்நாடு ஆயுத பலத்தோடு கூடிய சமாதானக் கொள்கையைக் கையாண்டு வருமாம்!

---

### ஆசாதின் புதிய திட்டம்

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையைச் சாதிப்பதற்காக மௌலானா அபுல்கலாம் ஆஸாத் புதிதாக ஒரு திட்டம் தயாரித்திருக்கிறாரென்றும், இது பற்றிய தீர்மானமொன்று காரியக் கமிட்டியின் ஆலோசனைக்கு வருமென்றும் தெரிகிறது.

---

### சட்ட சபை மெம்பர்கள் சம்பளம்

சட்டசபை அங்கத்தினர்கள், உத்தியோகஸ்தர்கள் சம்பளங்களைக் கொடுத்து வரவேண்டிய விஷயத்தைப்பற்றிச் சர்க்கார் ஆலோசித்து வந்தது. தற்பொழுது இதை நிறுத்தவேண்டாமென்றும், வழக்கப்படிக் கொடுத்து வரவேண்டுமென்றும் சர்க்கார் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

---

### யுத்த நோக்கத்தைத் தெளிவுபடுத்த

யுத்த நோக்கங்களைத் தெளிவுபடுத்த சாம்ராஜ்ய நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு மகாநாட்டை லண்டனில் கூட்டுமாறு கானடா சர்க்கார் வற்புறுத்த வேண்டுமென்று கானடா பிரமுகர்கள் ஒரு அறிக்கை விட்டிருக்கின்றனர்.

---

### வைஸ்ராய் நிர்வாக சபை

#### காங்கிரசுக்கு 4 ஸ்தானங்கள்

வைஸ்ராய் தமது நிர்வாக சபையில் காங்கிரசுக்கு 4 ஸ்தானங்களும் முஸ்லிம் லீகுக்கு 2 ஸ்தானங்களும் கொடுக்க இசைந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது.

---

### ராமநாதபுரம் போர்டுத் தலைவர்

ராமநாதபுரம் ஜில்லா போர்டின் விசேஷக் கூட்டம் நவம்பர் 17உ காலை ராமநாதபுரம் கலெக்டரும் போர்டின் எக்ஸ் அபிஷியோ தலைவருமான மிஸ்டர் ஏ. ஆர். வி. வெஸ்ட்லேக் தலைமையில் போர்டுக்குத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்காகக் கூடியது. போர்டின் தலைவர் ஸ்தானத்துக்குக் காங்கிரஸ் அபேட்சகர் ஸ்ரீ பி. எஸ். குமாரஸ்வாமி ராஜா எம். எல். ஏ. யை, ஸ்ரீ முகுந்த ராஜய்யங்கார் பிரேரித்தார். ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் ஆமோதித்தார். ஸ்ரீ குமாரஸ்வாமி ராஜா இரண்டாம் முறையாகப் போர்டின் தலைவராக ஏகமனதாகத் தெரிந்தெடுக்கப்பட்டார். கலெக்டரும் மற்றவர்களும் தலைவரைப் பாராட்டிப் பேசினர்கள். அதற்கு அவர் தக்கவாறு பதிலளித்தார்.

---

பிரிட்டனிலுள்ள ஜெர்மன் கைதிகள் மிக ஜீவகாருண்ய முறையில் நடத்தப்படுகின்றனர்.



## இளஞ்சிங்கம் நீடூழி வாழ்க



ஸ்ரீ ஜவஹர்லாலுக்கு இந்த நவம்பர் மாதம் 14உ யுடன் ஐம்பதாண்டுகள் பூர்த்தியாயின. அவர் நீடூழி வாழ்க!

★

"விவாகம் நடந்து 18 வருஷம் ஆன பிறகும் கமலா ஒரு கன்னிப்பெண் மாதிரியிருந்தாள். நானும் கமலாவும் உலாவச் செல்ல முன் பின் தெரியாத இடங்களுக்குப் போனால் கமலா என் குமாரியா என்று சிலர் கேட்பார்கள். அவளும் இந்திராவும் இரு சகோதரிகள் மாதிரி யிருந்தனர்" —ஜவஹர்

---

"பிரிட்டன் எப்பொழுதாவது ஏகாதிபத்ய ஆசை கொண்டிருக்குமாயின் அதை அந்நாடு கைவிட்டு பல வருடங்களாகி விட்டன." —மாக்டனல்டு.

---

### சென்னைக் கமிஷனர் பதவி

ஸ்ரீ ஓ. புல்லா ரெட்டி சென்னைக் கார்ப்பொரேஷன் கமிஷனராக ஏற்கனவே நியமிக்கப்பட்டவர். இப்போது அவரை மாற்றிவிட்டு ஒரு ஐரோப்பிய ஐ.ஸி.எஸ் ஆபீசரை நியமிக்க முயற்சிகள் நடைபெறுவதாகச் சொல்லப்படுகிறது.

---

### மதுவிலக்குத் திட்டம்

#### மாறுதலேற்படாது

சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரிகள் அதிகாரத்திலிருந்த காலத்தில் 4 ஜில்லாக்களில் மதுவிலக்குத் திட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. இத்திட்டத்தில் சர்க்கார் மாறுதலெதுவும் செய்ய மாட்டார்களென்றும், மேற்கொண்டு வேறு ஜில்லாக்களில் அத்திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர மாட்டார்களென்றும் தெரிகிறது.

#### கட்டாய ஹிந்துஸ்தானி

இம்மாகாணத்தில் 200 பள்ளிக்கூடங்களில் கட்டாயமாக ஹிந்துஸ்தானியைப் போதிக்க உத்தரவிடப்பட்டது. இந்த உத்தரவை சர்க்கார் ரத்துச் செய்ய விரும்பவில்லையென நம்பத் தகுந்த விடத்திலிருந்து தெரியவருகிறது.

---

### ரயில் போக்கு வரத்து

காரைக்குடியிலிருந்து மானாமதுரைக்குச் செல்லும் ரயில் பாலத்தில் ஏற்பட்டிருந்த உடைப்புகள் சரி செய்யப்பட்டு விட்டன. ரயில் போகிறது. வடக்கே புதுக்கோட்டை வரை ரயில் போகிறது. அங்கிருந்து திருச்சிக்கு கூடிய சீக்கிரம் ரயில் விடப்படுமென்று தெரிகிறது.

---

### வக்கீல் தொழில் நடத்த

#### டாக்டர் சுப்பராயன் முடிவு

சென்னை மாஜி சட்ட மந்திரி டாக்டர் சுப்பராயன் இப்போது வக்கீல் தொழிலை நடத்த முடிவு செய்திருக்கிறார். இது சம்பந்தமாக தமக்கு ஹைகோர்ட்டில் ஒரு தனி அறை கொடுக்கப்படவேண்டும் என அவர் கேட்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

---

சென்ற வருடம்போல் இந்த வருடமும் சென்னை மாகாணத்தில் ரூ 75 லட்சம் நிலவரி வஜா அளிக்கப்படுமென்று தெரிகிறது.

## தென்னாடெங்கும் பெரு மழை

### பல இடங்களில் உடைப்பு :: ஏராளமான சேதம்

நவம்பர் 13,14,15உ களில் தென்னாடு முழுமையும் பலத்த மழை பெய்தது. தஞ்சை, திருச்சி, தென் ஆற்காடு ஜில்லாக்களிலுள்ள நதிகளிலெல்லாம் வெள்ளம் கரை புரண் டோடுகிறது. ஏரிகள், குளங்களெல்லாம் நிரம்பி விட்டன. ஆறுகளில் ஆடுமாடுகள் பல சிக்கிக் கொண்டன. குளிக்கச் சென்ற சிலரும், தற்செயலாக அகப்பட்டுக் கொண்ட பலரும் ஆற்றுக்குப் பலியானர்கள். பல இடங்களில் தந்தி, டெலிபோன் மின்சாரக் கம்பங்கள் பாதிக்கப் பட்டிருக்கின்றன. அநேக மரங்கள் வேருடன் சாய்ந்து விட்டன. பல இடங்களில் வீடுகள் இடிந்து விழுந்துவிட்டன. இடியின் காரணமாக சிலர் இறந்தனர். ஆடுமாடுகள் கொல்லப்பட்டன. பற்பல இடங்களில் ரயில் பாலங்கள் உடைப்பெடுத்து ரயில்கள் போகமுடியாம லாகிவிட்டன. தபால் பட்டுவாடா ஒழுங்காகச் செய்ய முடியவில்லை. பல இடங்களில் பஸ் போக்கு வரத்துக்கள் தடைப்பட்டன. மின்சார விளக்குகள் எரியவில்லை. இவைகளெல்லாம் அதிகாரிகளால் மிக ஜரூராகக் கவனிக்கப்பட்டு சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. மற்றும் சில கூடிய சீக்கிரம் சரிப்படுத்தப்பட்டு விடும். சுமார் 20 வருடங்களுக்குப் பின்னர் இப்படிப்பட்ட மழை பெய்தது கிடையாதென்று சொல்லுகின்றனர்.

கடுமையான மழையின் காரணமாக 16, 17 தேதிகளில் திருச்சி ரேடியோ நிலையம் வேலை செய்யவில்லை. 18உ முதல் வழக்கம் போல் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

#### புதிய வெள்ளம் பழைய வெள்ளத்தைக் கொண்டு போயிற்று!

கொஞ்சம் பசுமை நிறம் கண்ட பயிர்கள் இப் பெரு மழையால் நாசமாகி விட்டன. ஏரிகளும் கண்மாய்களும் உடைப்பெடுத்ததன் காரணமாக கொஞ்சம் இருந்த தண்ணீரையும் புதிய வெள்ளம் கொண்டுபோய் விட்டது.

மதுரைக்கும், ராமநாதபுரத்திற்கும் செல்லும் டெலிபோன் போக்கு வரத்து, வழியில் தென்னை மரங்கள் கம்பிகளின் மீது விழுந்ததால் தடைப்பட்டிருக்கிறது.

இரண்டு மூன்று தந்திக் கம்பங்கள் வீழ்ந்துவிட்டபடியால் காரைக்குடி—தேவகோட்டை தந்திப்போக்கு வரத்து தடைப்பட்டிருந்தது.

செட்டிநாட்டைச் சுற்றிலும் வெள்ளம். எங்கும் உடைப்பு. செட்டிநாடு, காரைக்குடி, தேவகோட்டை ஆகிய மூன்று ஊர்களுக்குச் செல்லும் ரஸ்தாக்களிலும் உடைப்பு ஏற்பட்டிருக்கிறது.

அப்பிரதேசங்களுக்குச் செல்லும் பஸ் போக்குவரத்து நிறுத்தப்பட்டிருந்தது.

#### புதுக்கோட்டை—திருச்சி ரயில் பாதை

புதுக்கோட்டைக்கும் திருச்சிக்கும் போகும் ரயில் பாதையில் 5 இடத்தில் உடைப்பு ஏற்பட்டிருக்கிறது. புதுக்கோட்டைக்கும் மானாமதுரைக்கும்போகும் பாதையில் தேவகோட்டை ரோடு ஸ்டேஷனுக்கருகாமையிலும், கல்லலுக்குப் பக்கத்திலும் உடைப்பு ஏற்பட்டிருக்கிறது.

தற்காலிகமாக இந்தோ சிலோன் எக்ஸ்பிரஸ் மதுரை வழியாகத் திருப்பப்பட்டிருக்கிறது.

#### காரைக்குடி

கிணறுகள் நிரம்பி விட்டன. நான்கு முழக் கயிறு இருந்தால் போதும் தண்ணீர் எடுக்க. சிற்சில இடங்களில் கையாலேயே தண்ணீர் முகர்ந்து விடலாம்.

நகரிலுள்ள அரளைக் கல்லால் கட்டப்பட்டிருந்த சுவர்கள் பெரும்பாலும் இடிந்து விழுந்து விட்டன.

பயிர்கள் அழிந்து விட்டன. தண்ணீரின் வேகத்தால் நிலங்களில் மணல் சேர்க்கப்பட்டு விட்டது.

#### 'ரயிலு எங்கே அய்யா வருது?'

காரைக்குடிச் சந்தையில் சென்ற வாரம் இரண்டணாவுக்கு 6 தேங்காய்கள். இந்த வாரம் மூன்று தான். ஏன் என்று கேட்டால் "ரயில் எங்கேயய்யா வருது?" என்கிறான் கடைக்காரன். கத்தரிக்காய் கூட விலை ஏறிவிட்டது. "இந்த சகதியில் நாங்க நாலுபேர் வண்டியைத் தள்ளினோமய்யா" என்கிறான் காய்கறிக் காரன். பாவம்! ஜில்லாபோர்டு ரோட்டுக்கள் தான் மழை பெய்தால் வண்டி ஒரு முழம் இறங்கி விடுமே!

காரைக்குடி கண்மாய்க் கரை பல இடங்களில் உடைப்பு எடுத்துக் கொண்டது. கரைக்கு அருகிலிருந்த இரண்டு வீடுகள் முன் ஜாக்கிரதையாகவே காலிசெய்யப்பட்டன. பல மரங்கள் விழுந்தவிட்டன.

செம்பை ஊற்றுப் பக்கத்தில் ரோட்டே தெரியாமலிருந்தது. ரோட்டு தண்ணீரின் வேகத்தால் பல இடங்களில் அரிக்கப்பட்டுவிட்டது. இங்குள்ள பம்பிங் ஸ்டேஷன் கட்டிடம் 8 அடி ஜலத்தால் சூழப்பட்டிருக்கிறது.

#### தேனாற்றுப் பாலத்தில் அகப்பட்டுக்கொண்டார்

தேனாற்றுப் பாலத்திற் கருகில்—ஆற்றின் நடுவிலுள்ள திட்டின்மீது நின்று ஒருவர் மீன் பிடித்துக்கொண்டிருந்தார். தண்ணீர் பெருகிவிட்டது, இறங்கிப் பார்த்தார். தண்ணீரின் வேகம் தாளவில்லை. பேசாமல் திட்டிலேயே உட்கார்ந்துவிட்டார். இவ்விஷயம் நகரிலுள்ளவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. ஒருவருடைய இடுப்பில் கயிற்றைக் கட்டி திட்டுக்கு அனுப்பினர்கள். இடையில் கயிறு அறுந்து விடவே அவர் அடித்துக்கொண்டு போகப்பட்டார். அரை மைல் தூரம் சென்றதும் யாரோ சிலரால் அவர் கரை யேற்றப்பட்டாராம். திட்டிலுள்ளவரைக் காப்பாற்ற மீண்டும் ஒருவர் இடுப்பில் கயிற்றைக் கட்டினர்கள். அவர் திட்டுக்குச் சென்று நின்றுகொண்டு, அங்கே யிருந்தவரை கயிறு வழியாகக் கரைக்கு அனுப்பிவிட்டு தாமும் வந்து சேர்ந்தார். காட்டார் கண்மாய் உடைத்துக்கொண்டு ஓடிவிட்டது. எங்கும் வெள்ள மயமாயிருந்தும் இதில் தண்ணீரோ கிடையாது. தேனாற்றுப் பாலத்துக்கருகிலிருக்கும் புழுதி விநாயகர் நீரில் முழுகிப் போனர். அவருடைய நகரக் கொட்டகை மேல்வாரம் வரை தண்ணீர். பாலத்திற்கு ஒரு சாண் குறைய முழுத்தண்ணீர் சில மணிநேரம் வரை ஓடியது.

#### தபால்

ரயில் வராததன் காரணமாக வியாழக்கிழமையும், வெள்ளிக்கிழமையும் தபால் வரவில்லை. சனிக்கிழமை பிற்பகல் திருச்சியிலிருந்து பஸ் மூலமாகத் தபால்கள் கொண்டு வரப்பட்டு பட்டுவாடா செய்யப்பட்டன. இம்முறையே இப்பொழுதும் கையாளப்பட்டுவருகிறது.

#### ஐயோ பாவம்

கண்டனூரில் சுவர் இடிந்து விழுந்ததன் காரணமாக கருப்பையா ஆச்சாரியார் என்பவர் இறந்து விட்டார். சுவருக்கருகில் கட்டப்பட்டிருந்த மாடும் கன்றும் கூட இறந்து போனதாகச் சொல்லப்படுகிறது.

#### மீண்டும் மழை

21உ இரவு 6½ மணி முதல் சுமார் 2 மணி நேரம் பலத்த மழை பெய்தது. சிறிது குறைந்திருந்த குளங்களும் கால்வாய்களும் நிரம்பிவிட்டன. தண்ணீர் வழிந்தோடுகிறது. கல்லுக்கட்டியில் மோதிலால் எம்போரியத்திற் கருகிலுள்ள மருந்துக்கடைச் சுவர் விழுந்துவிட்டது. வி. பி. எஸ். என். இரும்புக் கடைக்குள் தண்ணீர் புகுந்ததன் காரணமாக சுமார் 10 சிமின்ட் மூட்டைகள் சேதமாகிவிட்டன.

---

போலந்துக்குச் சொந்தமான கடற்படை இனி யுத்தம் முடியுமட்டும், பிரிட்டிஷ் கடற்படையுடன் கலந்து வேலை செய்யும். இதற்கான ஒப்பந்தம் ஏற்படுத்தப்பட்டது.

---

பிரெமன் என்ற ஜெர்மன் கப்பல் சோவியத் ரஷ்யாவுக்குச் சொந்தமானதாக மாற்றப்பட்டு விட்டதென்று பாரிஸ் ரேடியோ கூறுகிறது

## 1800 விமானங்கட்கு ஆர்டர்

1800 யுத்த விமானங்களைச் செய்தனுப்புமாறு அமெரிக்கக் கம்பெனிக்குப் பிரிட்டன் ஆர்டர் கொடுத்திருக்கிறது. இதன் விலை 240 லட்சம் டாலர். அமெரிக்கப் புதிய நடுநிலைமைச் சட்டப்படி ரொக்கம் கொடுத்துப் பின்பு சாக்குகளைக் கொண்டு போவதென்பதன் அர்த்தம் யாதென்பதை அமெரிக்க அக்கிய நாட்டிலாகா ஒரு முடிவு கூறும் வரை தளவாட ஏற்றுமதி நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது.

---

### அஸ்ஸாமில் புதிய மந்திரி சபை

காங்கிரஸ் மாகாணங்கள் மொத்தம் 8. அவைகளில் 7 ராஜிநாமா செய்துவிட்ட விஷயம் ஏற்கனவே பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. 8-வது மந்திரி சபையாகிய அஸ்ஸாம் மந்திரி சபையும் ராஜினாமா செய்துவிட்டது. ராஜிநாமா ஒப்புக்கொள்ளப்பட்டது.

அஸ்ஸாம் கவர்னரும் ஸர் முகம்மது சாதுல்லாவும் சம்பாஷித்தனர், மந்திரி சபை அமைக்கும்பொறுப்பை சர் சாதுல்லா ஏற்று மந்திரி சபையை நியமித்துவிட்டார். ஸர். மகம்மது சாதுல்லா பிரதம மந்திரி. தம்மோடு 5 சகாக்களை இப்பொழுது சேர்த்துக்கொண்டிருக்கிறார். இவர்களில் மூவர் ஹிந்துக்கள். இருவர் முகம்மதியர். இன்னும் நால்வர் சேர்க்கப்படுவர். (ஸர் முகம்மது சாதுல்லா கூட்டு மந்திரி சபை ஏற்படுமுன் பிரதம மந்திரியா யிருந்தவர்.)

---

### கடைசி சீனத் துறைமுகம்

#### ஜப்பானியர் பிடித்துக்கொண்டனராம்

சங்கிங்கிலுள்ள சீன கவர்ன்மெண்டாருக்கு வெளி உலகத்துடன் சம்பந்தப்படுத்துவதற்கு உதவியாக இருந்துவந்த கடைசித் துறைமுகமான பாக்காய் துறைமுகத்தில் ஜப்பானிய ராணுவமும் கடற்படையும் நுழைந்து அதனை வசப்படுத்திக் கொண்டதாக ஜப்பானிய அறிக்கை கூறுகிறது.

---

### ஜெர்மனியில் முடியாட்சி?

#### மாஜி கெய்சர் நம்பிக்கை

தமது வம்சத்தில் உதித்த ஒருவர் மீண்டும் சிம்மாசன மேறக்கூடுமென்ற நம்பிக்கையை மாஜி கெய்சர் அடியோடு விட்டுவிட வில்லையாம். முடியாட்சி கோஷ்டி வலுத்துவருவது அவருக்கு நம்பிக்கையளிக்கிறதாம்.

---

### ஐக்கிய மகாணத்தில் மாறுதலிருக்காது

காங்கிரஸ் மந்திரிகள் செய்துவிட்டுப் போன திட்டங்களில் தற்பொழுதய சர்க்கார் மாறுதல் ஒன்றையும் செய்யாதெனத் தெரிகிறது.

---

விமானப்படையுடன் சேர்ந்து போராடுவோர் இனிது பொழுது போக்குவதற்காக லார்டு நவ்பீல்டு 50,000 பவுன் நன்கொடை யளித்துள்ளார்.

---

### கப்பல் பிரயாணிகள் கவனிக்க

நாகபட்டணம் மதுரை கம்பெனி லிமிடெட்டார் அறிவிப்பதாவது:—

ஐரோப்பிய யுத்தம் காரணமாகக் கப்பல்கள் புறப்படும் தேதி முதலிய விவரங்கள் சரியானபடி அறிவிப்பதற்கில்லை. அவ்வப்பொழுது பிரயாணிகள் நேரடியாக மேற்படி கம்பெனிக்கு எழுதி விவரங்களை அறிந்து கொள்ளலாம்.

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவ. 21உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 26 | 12 | 0 |
| சவரன் (சில்லரையில்) | 26 | 12 | 6 |
| மூசை தோலா 1க்கு | 41 | 3 | 6 |
| வெள்ளி ரெடி | 61 | 10 | 0 |
| வெள்ளி (சில்லரையில்) ரூபாய் எடை | 0 | 10 | 0 |

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

நேச தேசத்தினருக்கு மொத்தம் 80 விமானங்கள் சேதமடைந்திருப்பதாக ஜெர்மனியிலிருந்து வெளிவரும் அறிக்கைகள் தெரிவிக்கின்றன. லண்டனிலுள்ளவர்கள் இதை மறுக்கின்றனர்.

## 16௳ வியாழன்

ஸ்பெயினில், வடமேற்குக் கடலோரமாக, விகோ என்ற பிரதேசத்தருகே நுழைந்த, லியாண்டர் என்ற ஜெர்மன் கப்பல், பிரிட்டிஷ் கப்பற்படையால் வசப்பற்றப்பட்டது. இந்தக் கப்பல், ரஷிய கப்பல் என வேடம் போட்டு நடித்துக்கொண்டிருந்தது.

மேற்கு அரங்கிலே, இருசாராரும், கைகலக்காது காத்துக்கொண்டிருக்கின்றனர். ரோந்து பார்க்கும் வேலை நடந்து வருகிறது.

மோசேல்பக்கமாக சில இடங்களில் ஜெர்மானியர், துப்பாக்கிப் பிரயோகமும் செய்தனர்.

### போலந்தில் ஜெர்மனியர் அவதி

ஜெர்மன் பத்திரிகை யொன்றில் வந்த சேதிஃய, பிரான்சு ரேடியோ, எடுத்துக் காட்டி, போலந்தில், ஜெர்மானியர் பாடு திண்டாட்டமாக இருப்பதை அவர்களே உணருவதாகவும், போலந்து மக்களை அடக்க முடியவில்லை என்றும், ஜெர்மன் போலீஸ் அதிகாரிகளில் பலரும், ஹிட்லரின் சூருவளிப் படையினரில் பலரும் கொல்லப்பட்டனர் என்வும், போலந்துக்காரர்கள் மிகக் கடூரமாக ஜெர்மானியரைத் தாக்குவதாகவும் கூறுகிறது.

இங்கிலாந்திலிருந்து நியூஜிலாந்துக்குச் சென்றுகொண்டிருந்த மடோர்ப்பா என்னும் பிரிட்டிஷ் கப்பல், ஒரு ஜெர்மன் சப்மரைனால் துரத்தப்பட்டது. பிரிட்டிஷ் கப்பல் மிக வேகமாகச் சென்றதால் பிறகு சப்மரைன் அலுத்துப் போய் நின்றுவிட்டது.



# ஜெர்மனியின் கடன் ஏறுகிறது!

## ஜெர்மன் சப்மரைன் ஜம்பம் சாயவில்லை

நெதர்லாண்டும், பெல்ஜியமும் மீண்டும் ஒருமுறை சமாதானம் ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபடுமெனத் தெரிகிறது.

சாம்ராஜ்ய மகாநாட்டில் கலந்துகொள்ள லண்டன் வந்துள்ள ஆஸ்டிரேலிய நாட்டு மந்திரி கேசி, பிரிட்டனுடன் வியாபார ஏற்பாடு செய்துள்ளார். இதன்படி கோடிக்கணக்கான பவுன் விலையில் யுத்த தளவாடங்கள், ஆஸ்டிரேலியாவிலிருந்து பிரிட்டன் வாங்கும். இதனை ஆஸ்டிரேலிய சட்டசபையில் கடற்படை மந்திரி ஸ்டீவர்ட் கூறினர். பிரிட்டனுக்கு விற்பதற்காக அமோகமாக யுத்த தளவாடங்கள் தயாரிக்க ஆஸ்டிரேலியா தயாராக இருக்கிறது.

பல்கேரியாவுடன் பிரிட்டன் ஒரு வியாபார ஒப்பந்தம் செய்துகொள்ளும். இதன்படி பல்கேரியா வெண்ணெய், இறைச்சி, பழம் முதலியவைகளை விற்கும் பிரிட்டன் ரப்பர் முதலிய பண்டங்களை பல்கேரியாவுக்கு விற்கும்.

2400 டன் எடையுள்ள பென்வேஸ் 1900 டன் எடையுள்ள நிடா என்னும் இரண்டு லிதுவேனிய நாட்டு சாமான் ஏற்றிச் செல்லும் கப்பல்கள், பால்டிக் கடலில், எஸ்தோனியாவுக்கருகே மூழ்கடிக்கப்பட்டன.

ஆகஸ்ட் மாதத்தில், ஜெர்மன் ரீஷ் (பார்லிமெண்ட்) பட்ட கடன், 6 கோடியே 80 இலட்சம் பவுனிலிருந்து, 7 கோடியே 79 இலட்சம் பவுனுக்கு வந்துவிட்டது.

பிரான்சின் பொக்கிஷ பலம் அதிகரித்திருக்கிறது.

ஆப்பிரிக்காவில்ஜெனரல் ஸ்மட்ஸ் பிரிட்டனுடன் யுத்தத்தில் சேரவேண்டுமென்ற கட்சித் தலைவர். ஜெனரல் ஹெர்டாஜ் நடுநிலைமை வகிக்க வேண்டுமென்ற கட்சியினர். இப்போது ஹெர்டாஜ் ஆட்சி வீழ்ந்து ஸ்மட்ஸ் ஆட்சி வந்திருக்கிறது.

இந்த புது ஆட்சியில், இரண்டு இடைக் காலத் தேர்தல்கள் வந்தன. இரண்டிலும் ஸ்மட்ஸ் கட்சியினரே வெற்றி பெற்றனர்.

### பின்லந்து சோவியத் சமரசப் பேச்சு முறிந்தது

"பின்லாந்து சோவியத்துடன் சமரசம் செய்துகொள்ள மறுப்பதால், பின்லந்து-சோவியத் சமரசப் பேச்சு முறிந்துவிட்டது" என ரஷ்யப் பத்திரிகைகளுக்கு ரஷ்ய சர்க்கார் சேதி விடுத்துள்ளனர்.

தமக்கு அனுப்பவேண்டிய சாமான்களை வேண்டுமென்றே, காலதாமதமாக அனுப்புவதாகவும், இனி அதிகமாக சாமான் விரைவில் அனுப்பவேண்டு மென்றும், முக்கியமாக, பெட்ரோலும் எண்ணெயும் தேவையென்றும், ஜெர்மன் அயல் நாட்டு இலாகா அதிகாரிகள், ருமேனிய சர்க்காரை வற்புறுத்துகின்றனர்.

### புத்தகங்களுக்குப் பக்கத்தில் துப்பாக்கி!

சர்வகலா சாலைகளின் ஆரம்பதினமான 15ந் தேதியன்று சினர் முசோலினி தமது மாளிகையின் முன் மாடியில் நின்றுகொண்டு சுமார் 75,000 பேரைக் கொண்ட ஒரு கூட்டத்தின் முன் பேசுகையில், "உங்கள் புத்தகங்களுக் கருகே, துப்பாக்கிகளையும் தயாராக வைத்துக்கொண்டிருங்கள். இத்தாலி கொண்டுள்ள சமாதான மனோபாவம் பலவீனத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல, ஆனல் அது ஆயுத பலத்துடன் கூடியதாகும்" எனக் குறிப்பிட்டார்.

'உட்டவுன்' என்ற எண்ணெய்க் கப்பல் வெடிவிபத்துக்குள்ளாகி மூழ்கிப் போயிற்று.

## 17௳ வெள்ளி

ஹிட்லருக்கு எதிரியாக நடந்துகொண்டதற்காக, கைது செய்யட்ட ஜெனரல் பிளாம்பர்க் சுவிட்ஜர்லாந்து எல்லையில், சுட்டுக் கொல்லப்பட்டதாக, லாமார்ட்டின் பத்திரிகை கூறுகிறது. ஹிட்லருக்கு எதிர்ப்பாக கட்சி சேர்த்ததற்காக 150 அதிகாரிகளும் கைது செய்யப்பட்டனர் என அப்பத்திரிகை கூறுகிறது.

போர்த்துகீய கிழக்காப்பிரிக்காவிலுள்ள லோரன் கோ மார்க்குவன் துறைமுகத்திற்கு வடகிழக்கே 180 மைல் தூரத்தில் போர்த்துகீய கிழக்காப்பிரிக்காவின் கடற்கரையிலிருந்து 3 மைலுக்குட்பட்ட டெல்கோல் விரி குடாவில் ஆப்பிரிக்கா ஷெல் என்ற பிரிட்டிஷ் கப்பல் ஆயுதபாணியான ஜெர்மன் கப்பலால் மூழ்கடிக்கப்பட்டது.

"அர்ரேக் ஜோட்" என்ற நார்வே எண்ணெய்க் கப்பலை ஜெர்மன் சப்மரீன் எச்சரிக்கை செய்யாமலே, இக்கப்பல் மீது டார்பிடோ குண்டைப் பிரயோகித்தது.

பிரஞ்சு கடற்படை நவம்பர் 10ந் தேதி வரை ஜெர்மனிக்குப் போய்க் கொண்டிருந்த தடுக்கப்பட்ட சாக்குகளில் 223287 டன் எடையுள்ள வற்றைக் கைப்பற்றியதாக பிரஞ்சு யுத்தமந்திரி பெர்ஞர்ட் கூறினர்.

(இதன் தொடர்ச்சி 12-ம் பக்கம்)

# நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1939-௵ O. S. No. 166.

மாரிமுத்துப் பிள்ளை — வாதி,

முனியாண்டி பிள்ளை 2, மைனர் பண்டாரம் கார்டியன் தாயார் காளி மூலம் 4 } பிரதி வாதிகள்.

2, 4 பிரதிவாதிகளுக்கு தெரிவிப்பதென்னவென்றால், வாதிக்கு 1ம் பிரதிவாதி 14—8—1927ல் ரூ. 100க்கு எழுதிக் கொடுத்திருக்கும் ஈடு பத்திரப் பாக்கி ரூ. 107—13—0க்கு வாதி பிருது நகலில் கண்டபடி பிருது செய்து 28—11—1939 வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அன்று காலை 10-மணிக்கு 2, 4 பிரதிவாதிகள் ஆஜராகி எதிர்வாதத்தை தெரிவித்துக்கொள்ளாவிட்டால் ஒரு தலைப் பக்ஷமாய் தீர்ப்பு செய்யப்படும்.

K. Harihara Iyer,
Pleader.

சிவகங்கை, 14-11-1939.





# வீராஸ்தமனம்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

விமலா:-(தூக்கத்தில்) நானும் வருகிறேன் நாதா......இதோ.........வெற்றி அவர் உயிருக்கு வெற்றி......நானும்...... (வாயிற் கதவை யாரோ தட்டும் சட்தம் கேட்கிறது. திலோத்தமா எழுந்து வாயிற் கதவுப் பக்கம் செல்கிறுள்)

திலோ:—யார் அது?

குரல்:—நான் தான்.........

திலோ:-ஊர் பேர் ஒன்று மில்லையா...? இரவு வேளையில் ஸ்திரீகள் தனியாக இருக்கும் போது......உம்......

குரல்:-இல்லை, நான்......வீரஸிம்ஹன் தோழன்.........

திலோ:-(படபடப்போடு கதவைத் திறந்து) அண்ணு.........

வீரஸிம்ஹன் தோழன்:- புண்யவான்!

திலோ:-என்ன? அவருக்கு என்ன?

வீரஸிம்ஹன் தோழன்.-வீர சொர்க்கமடைந்தார்.....(விமலா அலங்கோலமாக பிரவேசிக்கிறுள்,)

விமலா:-வீரசொர்க்க மடைந்தது யார்?

திலோ:-விமலா! அதைரியப்படாதே, அண்ணு கடமையைச் செய்தார். அதில் வெற்றியும் பெற்றுர்.

விமலா:-என்ன! அவர்...அவர்...(மூர்ச்சையடைந்து விழவும் திலோத்தமா தாங்கி நிறுத்துகின்றுள்)

திலோ:-இவளை சமாதானப் படுத்துவது எப்படி?......

வீரஸிம்ஹன்தோழன்:-(தனக்குள்)இவள் வீட்டுக்குள் இருக்க வேண்டியவள் அல்ல. அடர்களத்தை அலங்கரிக்க வேண்டியவள் (திலோத்தமாவை நோக்கி 'வருகிறேன்' என்று சொல்லிப் புறப்பட்டான்) திலோத்தமா விமலாவைத் தாங்கிக் கொண்டு சயன அறைக்குள் செல்கிறுள்.

### அங்கம் III

[திரோரி போர்க்களத்திற்கு பக்கத்தில் உள்ள ஒரு வனம். அந்த வனத்தை இரண்டாக வகுத்துச் செல்லும் குறுகிய பாதை. அந்தப் பாதையின் ஓரமாக தழைத்து வளர்ந்து நிற்கும் ஆலமரம். ஆலமரத்தின் அடியில் ஒரு கூடாரம்.

முன் அங்கத்தில் விவரிக்கப்பட்ட சம்பவங்கள் நடந்து இரண்டாவது வருஷ ஆரம்பம். ஒருநாள் மாலை வேளை. சூரியன் அடிவானில் மறையுந் தருணம்.

திலோத்தமா கூடார வாசலில் நிற்கிறுள்.]

திலோ:-(சூன்யமாயிருக்கும் பாதையை நோக்கிய வண்ணம்.) ஆம்! ஞாபகம் வருகிறது, மதனியின் ஞாபகம். அண்ணுவைப் போர்க் களத்திற்கு விரட்டிய ஞாபகங்கள் எல்லாம் மனக்கண் முன் தோன்றுகின்றன. இன்று, இப்போது எனக்கு மதனியின் நிலைமை! நியதியின் நர்த்தனம் தான் என்ன? ஊதி! எனக்கு அது இஷ்டமில்லை. நான் மதிப்பது வேறு விதமாயிருக்க வேண்டும்- விமலாவைப் போன்ற ஸ்திரீகளுக்குத் தான் சரி இந்த ஸதி எல்லாம்... (ரஞ்சித் ஸிம்ஹன் பிரவேசிக்கிறுன்)

ரஞ்சித்:-(முகவாட்டத்தோடு) எல்லாம் தொலைந்தது திலோத்தமா, யாவும் தொலைந்தது.

திலோ:-யுத்தம் என்னவாயிற்று?

ரஞ்சித்:-திரோரி முடிவு நமக்கு விபரீதமாய் விட்டது. இந்த சமயம் சிற்றூர் அரசர் விழுந்து விட்டார். தில்லி வேந்தன், ஸம்யுக்தாவை இழந்த துக்கத்தில் போரைக் கவனியாமல் இருக்கிறுர். பட்டாணியர் நமது அணிகளை உடைத்து சோரியின் தலைமையின்கீழ் முன்னேறுகின்றனர்.

திலோ:-(கண்களில் கோபம் ஜொலிக்க, படபடப் போடு) இந்த நிலைமையில் போர்க்களத்தை விட்டா வந்தீர்? என்ன கோழைத்தனம்!

ரஞ்சித்:- (நகைத்து) கோழைத்தனமாயிருக்கட்டும், தண்ணீர் கொடு. சேனாதிபதி மரண காயம்பட்டு கிடக்கிறுர். சீக்கிரம்........(திலோத்தமா கூடாரத்துக்குள் சென்று தண்ணீர் எடுத்துக் கொண்டுவருகிறுள். அதை வாங்கிக்கொண்டுரஞ்சித்ஸிம்ஹன் திரும்பினதும் பாதை வழியாக ஒரு கூட்டம் அப்கானியர் சற்றுத் தொலையில் வருவதைக் கண்டு, மனம் தளர்ந்து நிற்கிறுன்.)

திலோ:- என்ன?

ரஞ்சித்:- அதோ பார்.

திலோ:-(ரஞ்சித்ஸிம்ஹன் காட்டிய திசையை நோக்கி) அப்கானியர்.

ரஞ்சித்:- நமது சேனை முறியடிக்கப் பட்டிருக்கவேண்டும். அதோ அவர்கள் ஆயுதபாணிகளாய் வருகின்றனர்—சுமார் பத்து பேர் இருக்கும்......சரி......(கட்கத்தை உருவுகிறுன்.)

திலோ:-நானும் பக்க பலமாக.........

ரஞ்சித்:-இப்போது வேண்டாம். உன் உதவி தேவையென கருதும்போது அழைக்கிறேன்............

(ஒரு கூட்டம் அப்கானியர் இவர்கள் பக்கமாக வந்து நிற்கின்றனர்.)

அப்கானியக் கூட்டத் தலைவன்:-அதோ ஒரு ராஜபுத்திரனும் ஸ்திரீயும். பிடியுங்கள் அவர்களை.

ரஞ்சித்:-நான் உயிரோடு இருக்கும் போதே...........!

(கட்கத்தைச் சுழற்றி கொண்டு முன் செல்கிறுன். அப்கானியர் வளைத்துக் கொள்கின்றனர் ரஞ்சித்ஸிம்ஹனை.) யுத்தம் நடக்கிறது.)

திலோ:-ஆ!.........சரி......உம்!....... ஸபாஷ்! ...அப்படி!......அதோ அவர் தலையே நோக்கி கட்கம் பாய்ந்து வருகிறதே.........அப்படித் தடுங்கள்............ உம்......ஆ! நாதா!......இல்லை இல்லை. அந்த கட்கத்தையும் சின்ன பின்னமாக்கி விட்டார்.........(பட்டாணியரை கொஞ்ச தூரம் விரட்டிவிட்டு ரஞ்சித்ஸிம்ஹன் திரும்பினதும், ஒரு பட்டாணி கட்டாரியைரஞ்சித்தைநோக்கிவீசுகிறுன்.கட்டாரி ரஞ்சித்தின் பிடரியில் பாய்கிறது. ரஞ்சித் அலறி நிலத்தில் வீழ்கிறுன். திலோத்தமா ஓடிச் செல்கிறுள் அவன் அருகில்.)

திலோ:-(குனிந்து) நாதா.........

ரஞ்சித்:-(புன் முறுவலோடு) திலோத்தமா!.........

திலோ:-அப்கானியர் கோழைகளென்று நினைக்கவில்லை. பின்புறமிருந்து, கட்டாரியை வீசவல்லவா செய்தான் அந்த பேடி.

ரஞ்சித்:-உன் கட்டாரி எங்கே?

திலோ:-அதன் வேலையைச் செய்ய இதோ காத்திருக்கிறது. (கட்டாரியை உருவி தனது மார்பை நோக்கிப் பிடிக்கிறுள்.)

ரஞ்சித்: (மந்தஹாசத் தோடு) அவசரப் படாதே. முதலில் அதை என் மார்பில் சொருகு. அப்புறம்............

திலோ:- (திடுக்கிட்டு) என்ன?

ரஞ்சித்:-உம்! சீக்கிரம். இதோ அவர்கள் நெருங்கிவிட்டனர். ஒரு கணம் தான்......உம்! எனது கடைசி வேண்டுகோள், மிலேச்சன் கரத்தால் மரிக்க விரும்பவில்லை.

திலோ:-(ஒரு கணம் யோசித்து)சரி!... (கட்டாரியால் ஓங்கி ரஞ்சித் மார்பை நோக்கிக் குத்துகிறுள்.சுடு ரத்தம் குமுளித்துப் பொங்குகிறது மார்பிலிருந்து. நெருங்கி வந்த அப்கானியர் பிரமித்து நிற்கின்றனர் இந்தக் காக்ஷியைக் கண்டு.)

ரஞ்சித்:-(திலோத்தமாவின் கரத்தைப் பற்றி புன் முறுவலோடு) வீரமணி!...... (உயிர் விடுகிறுன்)

திலோ:-(கட்டாரியை, ரஞ்சித்ஸிம்ஹன் மார்பிலிருந்து உருவி எடுத்து) விமலா நீ உயிரோடு இல்லையே இதைக்காண உம்! ராஜபுத்திர வீரம் அஸ்தமித்துவிட்டது......(கட்டாரியைத் தனது மார்பில் செலுத்திக் கொல்கிறுள். மறுகணம் அப்படியே, ரஞ்சித் ஸிம்ஹன் உடல்மீது விழுந்து உயிர் துறக்கிறுள்.

### ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மானியம்

விலக்க முடியாத அவசியமான திட்டங்களை நிறைவேற்றத் தவிர மற்ற திட்டங்களுக்காக மானியங்கள், சென்னைக் கார்ப்பொரேஷன் உட்பட எல்லா ஸ்தல ஸ்தாபனங்களுக்கும், இந்த யுத்த நெருக்கடியில் வழங்கப்படமாட்டாதென சர்க்கார் எச்சரித்திருக்கின்றனர்.

# இப்போது பெரிய மனிதர்கள்

## ஆனல் 1914-ம் வருஷத்தில்?

### ஹிட்லர்

அடால்ப் ஹிட்லர் 1913 ல் வியன்ன நகரில் ஒரு வர்ணமடிக்கும் கூலிக்காரப் பையனக யிருந்தார். அந்த வருஷம் ஆகஸ்ட் 2உ யுத்தம் ஆரம்பமாகியபோது மூனிச் நகரத்திலே ஒரு குடிசை வீட்டில் இருந்தார் ஹிட்லர். யுத்தம் ஆரம்பித்து விட்டதென்ற செய்தி கேட்டதும் இந்த வாலிபன் "இந்த வீர சம்பவ காலத்தில் பிறந்தேனே" என்று சந்தோஷப்பட்டாராம். பவேரியாவின் ராணுவத்தில் ஒரு சோல்ஜராக எடுத்துக் கொள்ளுமாறு மனுக்கொடுத்தார். உடனே வருமாறு உத்தரவு வந்தது. அங்கிருந்துதான் ஹிட்லருக்கு அதிர்ஷ்டம் ஆரம்பித்தது.

### டிலாடியர்

பிரான்சின் தற்போதைய பிரதம மந்திரியான டிலாடியர் 1914 ல் ஒரு சிறிய பள்ளிக்கூட ஆசிரியர். யுத்தம் வந்தவுடன் டிலாடியர் இராணுவத்தில் சேர்ந்து சார்ஜெண்டானர். ஐரோப்பிய மகா யுத்தத்தில் டிலாடியர் ஒரு சாதாரண சோல்ஜர். அவ்வளவுதான். இன்று பிரதமர்.

### ஆருவது ஜார்ஜ்

பிரிட்டிஷ மன்னராகிய ஆருவது ஜார்ஜ் 1914ம் வருஷத்தில் 'காலிங்வுட்' என்ற கப்பலில் மாலுமித் தொழில் கற்றுக்கொண்டிருந்தார். வயது 18 தான். பிரின்ஸ் ஆல்பர்ட் என்றுகூட இதர பிள்ளைகள் கூப்பிடாமல் பி. ஏ. என்று தான் அழைத்து வந்தார்கள். பிரின்ஸ் ஆல்பர்ட்டுக்குப் படாடோபமே கிடையாது.

### ஸ்டாலின்

1914-ம் வருஷம் யுத்தத்தின்போது ஸ்டாலின் சைபீரியாவில் ஒரு ராஜீயக் கைதியாக அடைக்கப்பட்டு சுரங்க வேலைக்கு இழுத்துச் செல்லப்பட்டார். எத்தனையோ ராஜியக் கொலைகளுக்காக வும் குழச்சிகளுக்காகவுமே அந்தத் தண்டனை.

### முசோலினி

1914ல் மிலான் நகரத்தில் நடந்து கொண்டிருந்த ஒரு பத்திரிகையின் ஆசிரியர் பெனிடோ முசோலினி. அப்போது அவர் பெரிய அபேத வாதி. 'அவந்தி' பத்திரிகையின் சந்தாதாரர்கள் தொகை யுத்தம் வந்ததும் அதிகமாயிற்று. முசோலினி காரசாரமாக எழுதுவார். அவர் இராணுவத்தில் சேர்ந்து கார்ப்போரலாகவும் ஆனர். அக்காலத்தில் யுத்த களத்தில் முசோலினி தீரச் செயல்கள் ஒன்றும் செய்யவில்லை.

### காமலின்

இப்போது பிரிட்டிஷ் பிரஞ்சு சேனைகளின் மகா மாத்யனக இருக்கும் ஜெனரல் காமலின் பிரஞ்சு இராணுவத்தில் சிறிய ஜெனராலாக இருந்தவர். மேலே சொன்ன அத்தனை பேர்களைக் காட்டிலும் அந்த 1914 லிலேயே அதிக இராணுவ அனுபவம் பெற்றிருந்தவர் காமலின்தான். அவர் இராணுவ யோசனைகளை அப்போதே பிரஞ்சு சேனபதி கேட்டதுண்டு. அந்த அனுபவத்தின் மீதே இப்போது பெரிய பதவி கிடைத்திருக்கிறது. நெப்போலியனைப் போன்று வீரத்தில் சிறந்தவரெனப் புகழப்படுகிறார்.

---

### மருத்துவ சிகிச்சை

போது மக்கட்கு அறிவிப்பு

காரைக்குடி முனிசிபல் மருத்துவ இலாகா வைத்திய உத்தியோகஸ்தர், மருத்துவச்சி, ஹெல்த் விசிட்டர் ஆகியவர்களால் கர்ப்பிணிகளுக்கு அடியிற் கண்ட நிபந்தனைகளின் பிரகாரம் மருத்துவ சிகிச்சை அளிக்கப்படும்:

முனிசிபல் தாய்முறை, சிசு சம்ரக்ஷணை சாலைகளில் அளிக்கப்படும் மருத்துவ சிகிச்சை முற்றிலும் இலவசமானதே. தனிப்பட்ட நபர்கள் அவரவர்கள் வீட்டில் முனிசிபல் மருத்துவ இலாகா வேலைக்காரர்களின் உதவியை விரும்பினல் அடியிற் குறிப்பிட்ட விகிதப்பிரகாரம் பீசுகள் முனிசிபல் ஆபீசிலோ அல்லது மருத்துவ இலாகா வைத்திய உத்தியோகஸ்தரிடமோ முன்பணமாகக் கட்டவேண்டும்.

கர்ப்பிணியாக உள்ள ஒரு ஸ்திரீ தன் தனிப்பட்ட முறையிலோ அல்லது அவருடைய பர்த்தா அல்லது போஷகர் ஆகியவர்களில் எவரேனும் மாதம் ஒன்றுக்கு ரூ 100க்கு மேற்பட்ட வருமானம் உள்ளவர்களாக இருந்தால்,

| | |
|---|---|
| பிரஸவ தினத்தன்று மட்டும் சிகிச்சைக்கு | ரூ 5—0—0 |
| பிரஸவ தினத்தன்றும் பின்பும் தேவையான காலம் வரை கவனித்து வர | ரூ 15—0—0 |

வீதம் கட்டணம் செலுத்தவேண்டும். ஷை தொகைக்குக் குறைவாக வருமானம் உள்ளவர்களுக்கு முனிசிபல் மெடர்னிட்டி ஹோம்களிலாகிலும், அவைகளுக்கு வெளியேயாகிலும் இனமாக மருத்துவ சிகிச்சை செய்யப்படும். மேலே குறிப்பிட்ட கட்டணத்தைத் தவிர வேறு எவ்விதமான இனம்களோ பிரதிப்பிரயோஜனங்களோ ஷை மருத்துவ இலாகா வேலைக்காரர்களும் உத்தியோகஸ்தர்களும் வாங்குவதற்கு அருகரல்ல. பொதுமக்கள் அவ்விதம் இனம், பிரதிப்பிரயோஜனம் யாதொன்றும் அளிக்கக் கூடாதென்று இதன் மூலம் எச்சரிக்கை செய்யப்படுகிறர்கள் என்று கமிஷனர் அறிவிக்கிறார்.

---

### தொழிற் கட்சி

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் தொழிற் கட்சிக் கூட்டம் மேஜர் அட்லியை கட்சித் தலைவராகவும் ஆதர்கிரீன்வுட்டை உபதலைவராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுத்தது.

### கிழ உபாத்தியாயர்களுக்குச் சீட்டு

சென்னை சர்க்கார் ஆசிரியர்களுக்கு வயதை நிர்ணயித்து கல்வி விதிகளில் திருத்தம் செய்திருக்கின்றனர். அதன்படி ஆசிரியர்கள் 55 வயதுக்குமேல் உத்தியோகத்திலிருக்கக்கூடாது. மானேஜ்மெண்டு பள்ளிக்கூடங்களிலிருக்கிற ஆசிரியர்களுக்கு 55 வயதுக்கு மேற்பட்டு, கல்வியிலாகா டைரக்டர் உசிதப்படி சலுகை காட்டலாம். எந்தக் காரணத்தை முன்னிட்டும் 60 வயதுக்கு மேல் எந்த ஆசிரியரும் உத்தியோகத்திலிருக்கக் கூடாது.

---

### முடியரசுக்கு முயற்சி

ஜெர்மனியிலே பிரஷ்யா என்றுள்ள பகுதிக்கு மீண்டும் கெய்சர் குடும்பத்திலொருவரை அரசராக்கிவிட வேண்டுமென்று ஒரு ரகசிய இயக்கம் நடந்து வருகிறதாம். பவேரியா என்ற பகுதிக்குப் பழைய ராஜ வம்சத்தைச்சேர்ந்த ரூப்ரெக்ட் இளவரசனைக் கொணர்ந்து அரசனக்கிவிட வேண்டுமென்று மற்றொரு கூட்டம் முயன்று வருகிறதாம்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1939ஞு S. C. No 305

சிவகெங்கை ஜமீந்தாரவர்கள் } வாதி

கூளு சேர்வை } பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி செலுத்தவேண்டிய குத்தகை பாக்கி தொகை ரூ 19-10-4 க்கு பிருது செய்து 25-11-39உ வாய்தா யேர்ப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபணையிருந்தால் ஷை தேதியில் ஷை கோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவும். தவறினல் வாதிக்கு எக்ஸ்பார்ட்டியாக தீர்ப்பாகி விடும் என்பதை அறியவும்.

G. Balakrishna Iyer,

17—11—39 வாதி வக்கீல்





## ருசி பார்ப்பவர் மரணம்

### உணவில் விஷம் கலந்தார்களா?

ஹிட்லருக்காக சமைக்கப்படும் உணவை ருசி பார்ப்பவரான லெப்டினெண்ட் எர்னெஸ்ட் பால்ஸ் என்னும் 24 வயது வாலிபர் போன மாதம் அகியாயமாக இறந்து போனர். அவரது நோய் என்னவென்றும், எத்தனை நாள் படுக்கையிலிருந்தாரென்றும் எவருக்கும் தெரியாது. "சொற்பகால நோயினல் இறந்துபோனர்" என்று மட்டிலும் பிரசுரம் செய்யப்பட்டது. ஹிட்லரின் உணவை ருசிபார்த்தே உயிர் துறந்தார் என்று எல்லோரும் யூகிக்கின்றனர். இதேமாதிரி ஹிட்லரின் மோட்டார் ஓட்டியாயிருந்த ஒருவரும் சில நாட்களுக்கு முன் இறந்து போனரென்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். அவர் தோற்றத்தில் சரியாக ஹிட்லரை யொத்திருந்தார்.

---

### பீகாரில் காங்கிரஸ் கொள்கை அங்கீகாரம்

பீகார் கவர்னரின் ஆலோசனையாளர்கள் மந்திரி சபையின் திட்டங்களை நீடித்து நடத்துவார்களெனத் தெரிகிறது. இவர்களும், சென்ற சத்தியாக்ரக இயக்கத்தில் கலந்து கொண்டதற்காக நீக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களை, பழைய மந்திரி சபையின் கொள்கையைப் பின்பற்றி திருப்பி எடுத்துக்கொள்வார்களென நிச்சயமாகத் தெரிகிறது. மேலும் சர்க்கார் ஊழியர்களுக்கும் இதா சிப்பந்திகளுக்கும் கதர் ஆடையே வழங்கி வருவார்களாம்.

---

### செய்கோன்

இந்தோ சைன நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்

பிரமாதி வருடம் புரட்டாசி மாதம் 15உ ஞாயிற்றுக்கிழமை காலை $10\frac{1}{2}$ மணிக்கு இந்தோ சைன நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கத்து ஒன்பதாவது வருட எட்டாவது நிர்வாக சபைக் கூட்டம் சங்கத் தலைவர் திரு. வெ. வீர. நா. மு. சுப்பையா செட்டியார் தலைமையில் கூடியது.

செப்டம்பர் மாதத்து சங்கத்து நடவடிக்கை விவரங்களும், கணக்கு விவரங்களும் வாசித்து அங்கீகரிக்கப்பெற்றன. திரு. யெ. மு. வைரவன் செட்டியார் தாய்நாடு செல்வதை முன்னிட்டும், திரு. யெ. நா. மு. நா. கிருஷ்ணப்ப செட்டியார் இரங்கூன் செல்வதை முன்னிட்டும், ஷையார்களின் நிர்வாக சபை மெம்பர் பதவி ராஜிநாமா ஒப்புக்கொள்ளப்பட்டது. உப காரியதரிசியால் வந்தனங் கூறப்பெற்று கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

### "ஹிட்லரைக் கொல்"

பெர்லினில் விளக்குகள் அணைக்கப்பட்டிருக்கின்றன. அந்த இருண்ட வீதிகளில் நீங்கள் போய்க்கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். உங்கள்மீது ஒரு மனிதன் திடீரென்று மோதுவான். உடனே அவன் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு மறைந்துவிடுவான். பின்னர் நீங்கள் வீட்டிற்குச் சென்றால் உங்கள் சட்டைப் பை நிறைய கத்தைக் காகிதங்களைக் காண்பீர்கள். அந்தக் காகிதங்கள் ஒவ்வொன்றிலும் என்ன எழுதியிருக்கும் தெரியுமா? 'ஹிட்லரைக் கொல்லுங்கள்' என்ற வார்த்தைகளே காணப்படுகின்றன. இது மாதிரி பிரசுரங்கள் பெர்லினில் வெகு சாமார்த்தியமாக வழங்கப்படுகிறன்றன.

---

### 'பிரம்படி'க்குப் பிரிவுபசாரம்

"ஆரம்பப் பாடசாலைகளில் பிரம்படி போன்ற தண்டனைகளை மாணவருக்குத் தரக்கூடாது" என்று சென்னை சர்க்கார், கல்வி இலாகா நிர்வாகச் சட்டத்திலேயே புகுத்தியிருக்கிறது.

---

### பியாப்பம், கமலா நேரு சங்கம்

இச்சங்கத்தில் ஐப்பசித் திங்கள் 24-ம் நாள் காலை 9 மணிக்கு தீபாவளிப் பண்டிகையை முன்னிட்டு ஒரு விசேடக் கூட்டம் ஸ்ரீ மு. சொ. ஆறு. ஆறுமுகம் பிள்ளை தலைமையில் ஆரம்பமாகியது. தலைவர் முன்னுரைக்குப்பின் திருவாளர்களான வி. ஆர். கிருஷ்ணசாமி ஐயர், நடராஜபிள்ளை, லெட்சுமணன், சக்திவேல், சுந்தரம், சா. கணபதி ஆகியோர் பேசினர்கள். தலைவர் முடிவுரை கூறியதும் சங்கீதக் கச்சேரியோடு பகல் 12 மணிக்கு கூட்டம் நிறைவெய்தியது.

### ராஜாஜி உடற் பயிற்சிசாலை

பிரமாதி ஆண்டு ஐப்பசித் திங்கள் 24-ம்நாள் காலை 11 மணிக்கு மேல் கமலா நேரு சங்க காரியதரிசி திரு. ராம. அருணசலம் 'ராஜாஜி உடற்பயிற்சிசாலை' யைத் திறந்துவைத்தார்.

---

### மாகாண பட்ஜட்

வைஸ்ராய் பார்வைக்கு

ராஜிநாமா செய்துவிட்ட காங்கிரஸ் மந்திரிகள் தத்தமது மாகாணத்தில் தயாரித்துள்ள வரவு செலவுத் திட்டத்தைப் பரிசிலனை செய்து தம்மிடம் அனுப்பி வைக்கும்படி வைசிராய் மாகாண சர்க்கார்களுக்கு உத்தரவிட்டுள்ளார்.

---

### உதவி எப்படி இருந்திருக்க வேண்டும்?

போலந்து-ஜெர்மனி யுத்தத்தில், பிரிட்டிஷ் சர்க்கார் நடத்தையைப்பற்றி லாயிட் ஜார்ஜ் எழுதியுள்ள ஒரு கட்டுரையில், போலந்து தோல்வியின் ஒரு பங்கு பிரிட்டனைச் சாருமென்றும், போலந்து சர்க்கார் பணம் கடன் கேட்டபோது பல நாள் கடத்தி கடைசியில் மிகவும் சிறு தொகை கொடுக்கப்பட்டதென்றும், நேரியாக ஜெர்மனி போலந்துடன் ... போர் செய்த பிறகும் இரண்டு நாள்வரை ஜெர்மனியின் பாய்ச்சல் வேகம் குறையும்படியாக எவ்வித முடிவும் செய்யப்படவில்லையென்றும், யுத்தம் ஆரம்பித்த உடனே பிரிட்டிஷ் பிரான்சு தம் விமானங்களை அனுப்பி ஜெர்மன் விமானத் தொழிற்சாலைகளைத் தகர்த்திருந்தால் போலந்தைக் கைவிட்டு ஜெர்மன் படைகள் தாய்நாடு சேர்ந்திருக்குமென்றும், அப்பொழுது போலந்து தன் படைகளைக் கெட்டிப் படுத்திக்கொண்டிருக்குமென்றும் கூறுகிறார்.

## சோதிடமாது கம்பி நீட்டிவிட்டாள்

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

"வெண்டர்" என்ற ஜெர்மன் கப்பல் (989) ஒரு பிரிட்டிஷ் யுத்தக் கப்பலால் 16ந் தேதி காலே மேற்குக் கரையில் பிடிக்கப்பட்டது.

### ஜேர்மன் விமானங்கள் மீது பெல்ஜிய பீரங்கிப் பிரயோகம்

ஜெர்மன் விமானங்கள் வட பிரான்சில் வேவு பார்த்துவிட்டுத் திரும்புகையில் விமானங்கள் பெல்ஜியத்தின் மீது பறந்து சென்றன. இவ்விரு விமானங்களை நோக்கி பெல்ஜிய விமான எதிர்ப்புப் பீரங்கிகள் குண்டுகளைப் பிரயோகித்தன.

### 18உ சனி

மியூனிச் வெடிகுண்டு வீச்சு சம்பந்தமாக ஜெர்மன் நாஜிகள் நடத்தும் கொடுமை சகிக்க முடியாததாக இருக்கிறது. இது சம்பந்தமாக ஆஸ்ட்டிரியாவில் பலர் தினமும் கைது செய்யப்பட்டு வருகின்றனர்.

இதைக் கண்டு ஆத்திரமடைந்த ஒரு ஆள் வியன்ன நகரில் ஒரு பெரிய ஜெர்மன் போலீஸ் அதிகாரியைக் கொன்று விட்டார். கெஸ்டாபோ அவனைப்பிடிக்க முயலுகின்றனர்.

செக் நாட்டு மாணவர்களை ஜெர்மனிக்காரர் கொன்றதற்காக, யுகோஸ்லோவியா மாணவர்கள் தமது கண்டனத்தைத் தெரிவித்து ஆர்ப்பாட்டம் செய்தனர். யுகோஸ்லேவியாவிலுள்ள ஜெர்மன் தூதர் ஆபீஸ் போலீஸ் காவலில் இருக்கிறது.

போர் துவங்கினது முதற்கொண்டு, நடுநிலைமை நாட்டுத் துறைமுகமான

## இத்தாலி சோவியத் தகராறு முற்றுகிறது

### வியன்ன போலீஸ் அதிகாரி கொலை

லோபிடோ (போர்ச்சுகலுக்குச் சொந்தமான மேற்கு ஆப்பிரிக்கா பிரதேசத்திலுள்ள துறைமுகம்) வில், 16,000 டன் எடையுள்ள விண்ஹுக், 8000 டன் எடையுள்ள அடால்ப் வோர்மான் எனும், இரு ஜெர்மன் கப்பல்கள், பதுங்கிக்கிடந்தன. இவைகள் மெதுவாக வெளிக்கிளம்பின. எந்த இடத்திற்குச் செல்கின்றன என்பது தெரியவில்லை.

### ஜோதிடம் பார்க்கும் மாது கம்பி நீட்டினள்

ஹெர் ஹிட்லருக்கு ஜோதிடம் கூறும் மாது, மாடம் எபர்லின், ஹிட்லரின் இறுதிக்காலம் முடியப் போவதாகக் கருதிக்கொண்டு, இனி, அவருடன் இருக்கக் கூடாதென எண்ணி, ஜெர்மனியை விட்டு ஓடிவிட்டாள்.

ஜெர்மன் ஆட்சியிலுள்ள செக்கோஸ்லவேகியாவின் தலைநகரான பிரேக்கிலும், இதர நகரங்களிலும் ராணுவச் சட்டம் பிறப்பிக்கப்பட்டிருக்கிறதாக ஜெர்மன் சர்க்கார் அறிவிக்கின்றனர்.

செக் நாட்டில் பெரும் கலவரம் ஏற்பட்டிருப்பதாக லண்டனுக்குச் செய்திகள் கிடைக்கின்றன.

மேற்குப் போர் முனைகளில் பல இடங்களில் காவற் படைகளும் பீரங்கிப் படைகளும் சுறு சுறுப்பாக இருந்தன. 17ந் தேதி வோஸ் ஜெஸ் பிரதேசத்தின் மீது பறந்த ஜெர்மன் விமானங்களில் ஒன்று வீழ்ந்தது.

ஜெர்மனியில் காவலில் வைக்கப்பட்டிருக்கும் பிரிட்டிஷ் சிவிலியன்களையும் பிரிட்டனில் காவலில் வைக்கப்பட்டிருக்கும் ஜெர்மன் சிவிலியன்களையும் பரிவர்த்தனை செய்து கொள்ளும் ஏற்பாடு சர்க்காரால் ஆலோசிக்கப்பட்டு வருகிறது.

கோதுமை ஏற்றிச் சென்ற "குளோரியா" என்ற ஜெர்மன் கப்பல் பிடிபட்டது. மாலுமிகள் காவலில் வைக்கப்பட்டனர்.

வேவு பார்ப்பதாகவும், நாஜி பிரசாரம் செய்வதாகவும் சந்தேகிக்கப்பட்டு ஒரு பெண்ணும், ஒரு போட்டோ கிராபரும் உட்பட 8 ஜெர்மனியர் துருக்கியில் கைது செய்யப்பட்டனரெனத் தெரிகிறது.

### சோவியத் இத்தாலி தகராறு

பால்கனில் இத்தாலிக்கும், சோவியத் ரஷ்யாவிற்கு மிடையே ஏற்படக்கூடிய தகராறு வரவர வெளிப்படையாய்த் தெரிந்து கொண்டு வருகிறதென "லா டெம்ஸ்" பத்திரிகையின் ரோம் நிருபர் எழுதியுள்ளார்.

"மற்றவர்களுடைய புரட்சிகளை உபயோகித்தோ அல்லது உளுத்துப்போன சமூகப் புரட்சியை ஆசைகாட்டியோ பொதுவுடமைக் கட்சி பால்கனில் தன் செல்வாக்கை விஸ்தரித்துக் கொள்ளலாமென்று நினைத்தால், சீனர் முசோலினியின் பட்டாளங்களையும் கருத்துகளையும் எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும்" என 'கிரிடிகாபா விஸ்டா' என்ற இதாலியப் பத்திரிகையில் எழுதியிருப்பதாகவும் ஷை நிருபர் கூறியுள்ளார்.

டச்சு நடுநிலைமையை ஜெர்மன் கடல் விமானங்கள் இருமுறை மீறியதாக டச்சு சர்க்கார் ஜெர்மன் சர்க்காருக்கு ஒரு ஆட்சேபனை அனுப்பியுள்ளார்கள்.

## ஹிட்லரின் முடிவுகாலம் நெருங்குகிறதாம்

ஒரு பிரிட்டிஷ் காவல் கப்பல் ஒரு ஜெர்மன் கப்பலை நிற்கும்படி உத்தரவிட்ட போது அதன் கேப்டன் பிடிபடுவதை விரும்பாமல் கப்பலில் துவாரம் போட்டு மூழ்கடித்து விட்டார்.

8000 டன் எடையுள்ள "ஸைமன் பொலிவார்" என்ற டச்சுக் கப்பல் கிழக்குக் கரையில் மூழ்கி விட்டது.

லாட்வியா தேசத்துக் கப்பல் ஒன்று ஜிப்ரூக் அருகில் கடற் சுரங்கக் கண்ணி வெடி யொன்றில் தாக்கி மூழ்கியது.

பிரிட்டனில் இன்று மாலை எஸெக்ஸ் கடற்கரைப் பிரதேசத்தில் விமான அபாய எச்சரிக்கை கொடுக்கப்பட்டது. 50 நிமிஷத்திற்குப் பிறகு அபாயம் நீங்கியதாக அறிவிக்கப்பட்டது. பிரஞ்சிலும் லில்லீ பிரதேசத்தில் இவ்வாறு எச்சரிக்கை செய்யப்பட்டது.









Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

